ஓம் பரப்பிரம்மணே நம:

**64-பக்கங்கள்.**

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம் எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
COPY RIGHT] திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.) [REGISTERED.

| | | |
|---|---|---|
| கமலம்-7. | சென்னை ஆங்கீரஸ ஞு ஆவணி மீ 1 வ | இதழ் 77. |
| Vol. 7. | 1932 மு ஆகஸ்டு மீ 16 வ | No. 77. |




"கண்ணனடியைக் கனவிலும் மறவேல்" என்ற பெரியோர் வாக்கியப்படி நாம் கிருஷ்ண மூர்த்தியின் பாதாரவிந்தங்களை ஸதா தியானிக்கக்கடவோம். மற்ற மூர்த்திகளைவிட ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி எவ்விதத்தில் மேம்பாடுடையவரெனில், சொல்லுகிறோம். ஞானத்தை யடைந்தோர் பெரியோர். அஃதடையாதோர் சிறியோர். அவர்களுக்கும் குழந்தைகளுக்கும் என்ன பேதம்? குழந்தைகள் இன்னது ஹிதம், இன்னது அஹிதம் என்று அறியாமல் எல்லாவற்றையும் உட்கொண்டு நோயால் அவஸ்தைப்படுகின்றன. அஞ்ஞானிகளாகிய நாம் முக்திவழி இன்னதென்றறிந்து அதை யனுஸரியாமல் கேவலம் உலக இன்பத்தையே பெரிதாக எண்ணி அனுபவித்து அவஸ்தைப் படுகிறோம். குழந்தைகளுக்கு உசிதமான பாலை தாயானவள் கோபாலனிடம் (இடையனிடம்) வாங்கி யளிக்கிறாள். அஞ்ஞானிகளாகிய நமக்கு பகவான் கோபாலனாயிருந்து ஞானமாகிய பாலை உபநிஷத்தென்னும் பசுவினிடம் அர்ஜுனனாகிய கன்றுக்குட்டியின் உதவியால் மேன்மேலும் சுரக்கச்செய்து தாமே கறந்து பகவத்கீதை யென்னும் பாத்திரத்தில் நிறைத்து வைத்திருக்கிறார். அதையுண்ண வேண்டிய நாம் அவிவேகத்தால் ஸாரமற்ற நூல்களை வாங்கி வாசித்து அகங்கார முதலிய நோய்களாற் பீடையுற்று வருந்துகிறோம். இது அறியாமையேயாம். அவ்வாறின்றி, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் மகிமையையும், அவருடைய உபதேசங்களையும் சற்று சிந்திக்கத் தொடங்கினால் உடனே உண்மை புலப்படும். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி இடையன்தான். பசுக்களாகிய நம்மைக் காப்பாற்றுவதற்கென்று அவதரித்த கண்ணன் இடையனா

யிராமல் வேறு எந்த ஜாதியா யிருப்பான்? அவர் காப்பாற்றிப் பால் கறந்த பசு எது தெரியுமா? உபநிஷத்துக்களாகிய பசுக்கள். அவருடைய பால் என்ன பால்? அது ஞானப்பால். அந்தப் பாலை யுண்டவர்கள் பெறும் பயன் என்ன? முக்தியாகிய பயன். ஆகவே, பிராணிகட்கு மோக்ஷ ஸாதனமான பாலைக் கறந்த பரம கருணாநிதியான ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியை எல்லா மூர்த்திகளை யும்விட மேம்பாடுடையவ ரெனலாம். ஆதலின், ஸ்ரீ கண்ணனின் அவதார மாதமாகிய இந்த ஆவணியில் ஸ்ரீ கிருஷ்ணஜயந்தியின்போதும், எப்போதும் அவருடைய பாதாரவிந்தங்களை நாம் ஸ்வப்பனத்திலும் மறவாமல் ஸதா தியானம் செய்யக்கடவோம்.

ஃ

"முராரியைப் போற்றி மோட்சத்தைப் பெறு" என்று முதியோர் கூறுகின்றனர். முரன் என்ற அசுரனைக்கொன்று ஜெயம் பெற்றதால் மகா விஷ்ணுவுக்கு முராரி யென்ற பெயர் வந்தது. அவர் நம்மிடமுள்ள அஞ்ஞானமாகிய அசுரனைக் கொல்லும் சக்தியை யுடையவராதலின் முராரியைப் போற்றும்படி பெரியோர் கூறலாயினர். எந்த நிமிஷத்தில் அஞ்ஞானம் நீங்குகிறதோ அந்த நிமிஷத்திலேயே ஞானமுண்டாகி மோக்ஷம் சித்திக்கிறது. இருளில்லா விடத்தில் பிரகாசம் நிலைப்பதுபோல, அஞ்ஞானம் இல்லாதவிடத்து ஞானம் நிலைப்பது நிச்சயமாம். ஸ்ரீ கிருஷ்ணவதாரம் செய்த எம்பெருமான் கம்ஸனாதிய அசுரர்களையும், சிசுபாலன் முதலிய துஷ்ட மன்னர்களையும் சம்ஹரித்ததோடு பக்தனாகிய அர்ஜுனனுக்குற்ற மருளை நீக்கி, உத்தவர், அக்குரூர் முதலிய மகான்களுக்கு ஞானோபதேசம் செய்து, அவர்களிடம் குடிகொண்டிருந்த அஞ்ஞான மென்னும் அசுரனை யதட்டி விரட்டினர். இவ்வாறு பிராணிகள் உஜ்ஜீவிக்கும்பொருட்டு மகத்தான கிருபையோடு திருவவதாரம் செய்த ஸ்ரீ விஷ்ணு மூர்த்தியை நாம் பிரதி தினமும் பிரதி நிமிஷமும் ஸ்தோத்திரம் செய்யக்கடவோம்.

ஹரே முராரே, மதுகைட பாரே,
கோபால கோவிந்த முகுந்த ஸவ்ரே!

என்பது வங்கபாஷையிலுள்ள ஸ்ரீ கிருஷ்ண ஸ்தோத்திரமாகும்.

ஃ

"இராமாமிர்தம்" என்று சிலருக்குப் பெயருண்டு. ராம சப்தத்தில் அமிர்த மிருப்பதாய்ப் பெரியோர் நினைக்கின்றனர். ஆதலின், அவர்கள் ராம ராம வென்று ஸதா தியானம் செய்கிறார்கள். ஸ்ரீராம மூர்த்தியைப் பூஜிக்கிறவர்கள் சத்துருக்களை ஜெயித்து, இகலோகத்தில் ஸகல ஸம்பத்துகளையு மடைந்து, பரலோக சாம்ராஜ்யத்தையு மெய்துவர்.

ஃ

"மாயையும் கடவுளும்" பரமேசுவரன் பாம்பைப்போலிருக்கிறார். பாம்பு விஷத்தை வைத்துக் கொண்டிருப்பதுபோல் பரமசிவன் மாயையாகிய நஞ்சை வைத்துக் கொண்டிருக்கிறார். விஷமானது பாம்பை ஒன்றும் செய்ய

"எவரே புன்படா துலகிற் புகழுடம்படைந்தார்?"

வில்லை. அதுபோல், மாயையும் பரமேசுவரனைப் பீடிப்பதில்லையாம். ஈசுவரனுக்கு நல்வினை, தீவினை யென்னும் இருவினைகள் அடங்கிய உலகம் ஒருவித உபத்திரவத்தையும் செய்யமாட்டாது என்றபடி.

ஃ

“ஹரி: ஓம்” என்று ஹரிச்சுவடியைப் படித்த நாம் ஹரியை இறக்குமளவும் மறக்கலாமா? நம்முடைய முன்னோர்களின் தந்திரத்தைப் பாருங்கள். பிள்ளைகட்கு ஐந்தாம் வயது வந்தவுடன், பள்ளிக்கூடத்தில் வைத்து முதலில் “ஹரி : ஓம்” என்று கற்பிக்கிறார்கள். இதனால் பகவானுடைய தியானம் பிரதான மென்பதும், அவரைத் தியானிக்காமல் எந்த நூலையும் கற்கத் துணிவது நிஷ்பிரயோஜன மென்பதும், இளம்பிராயத்தில் கற்றவை எப்போதுமிருக்கு மாதலின், தம்மக்கள் ஸ்ரீ ஹரியை எக்காலத்தும் மறக்க மாட்டார்களென்பதும் நமது முன்னோர்களின் கொள்கையென அறியலாம். இதிலும் இன்னொரு ஸ்வாரஸ்யமுண்டு. “ஓம்” என்னும் பிரணவ மந்திரத்தைச் சொல்லுமுன் ஸ்ரீ ஹரியின் நாமத்தை உச்சரிக்கவேண்டுமென்றறிகிறோம். அதாவது:—ஸ்ரீ ஹரியின் கிருபை யிருந்தாலன்றி பிரம்மஞானத்தை யடைய முடியாது. ஸ்ரீ ஹரியைப் பிரார்த்தித்தாலன்றி ஜீவன் முக்தியைப்பெற முடியாது என்று ஆதிகாலமுதல் ஏற்பட்டிருக்கும் உண்மையை நாம் இதிலிருந்து வியக்தமாய் அறிந்து கொள்ளுகிறோம். உலகத்தில் மூன்றுவித மார்க்கங்களை யனுஸரித்து முக்தியை யடைகிறார்கள். ஒன்று ஞான மார்க்கம். மற்றொன்று பக்தி மார்க்கம். வேறொன்று கர்ம மார்க்கம். வனத்திற் சென்று காயக்கிலேசம் செய்து யோகாப்பியாஸங்களைப் பண்ணி ஹிருதயத்தை சுத்தமாக்குவோர் சிலர். பகவானிடம் பிரேமை பாராட்டி அவரை விட்டுப்பிரிய முடியாமல் பக்தி செய்வோர் சிலர். ஸத்கருமங்களை யியற்றி அவற்றை ஈசுவரார்ப்பணம் செய்வோர் சிலர். இம்மூன்றுவித மனுஷ்யர்களிலும் ஆநந்த பரவசர்களா யிருப்பவர் பக்தர்களேயாவார். பகவானாகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா “எவன் என்னிடம் பக்தி செய்கிறானோ அவனிடம் நான் பக்தி செய்வேன்” என்றார். அந்தப்படியே அம்பரீஷர், நாரதர், பராசரர் முதலிய விக்கிரகங்களை வைத்து ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தி பூஜை செய்ததை பாகவதோத்தமராகிய நாரதர் பிரத்தியக்ஷமாகக் கண்டு ஆச்சரியம் கொண்டார். ஹா! பகவானுடைய கருணை என்ன கருணை!! பாருங்கள். இத்தனை கிருபையும் பிரேமையும் பக்தர்களிடம் பாராட்டி, அவர்களுக்கு ஞானத்தையும் முக்தியையும் அளிக்கும் திவ்யமங்கள மூர்த்தியாகிய ஸ்ரீ ஹரியை நாம் ஒரு நிமிஷப் போதாகிலும் மறந்திருப்பது நியாயமா? அவருடைய கமலத்திருவடிகளை ஸதா தியானித்து அதனின் றொழுகும் தேனை யருந்தக்கடவோம்.

ஃ

“பரமாத்மா மனோவாக்குக்கெட்டாதவர்” ஸச்சிதானந்த ஸ்வரூபி. இன்னதென்று சொல்ல முடியாதவர். வேதங்களும் அவரை வர்ணிக்க முடியவில்லை. ஆயினும், நாம் அவரை யடையவேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்? அவரோ வாக்குக் கெட்டாதவர், வர்ணிக்கப்படாதவர், எங்கும்

---

உத்தமர்கள் எவ்வளவு மனவேற்றுமை இருந்தாலும் ஒன்றுகூடி அவரவர்களின் அபிப்பிராயங்களை வெளியிடத் தயங்குவதில்லை.

கிறைந்தவர், எப்படி அவரைப் பார்ப்போம் என்று சும்மா விருப்பதிலென்ன உபயோகம்? பிராணிகள் தம்மை யடைய முடியாமல் கஷ்டப்படுவார்களே யென்ற பரம கருணையால் பகவான் இவ்வுலகத்தில் பலவித அவதாரங்களைச் செய்கிறார். இயேசு தேவகுமாரனென்று கிறிஸ்துவர் கூறுகின்றனர். நாம் அதை மறுக்கவில்லை. கிருஷ்ண மூர்த்தி தாம் பற்பல இடங்களிலும் பிராணிகளுடைய க்ஷேமார்த்தமாய்ப் பலவித அவதாரங்களை யெடுப்பதாகக் கூறியிருக்கிறார். ஆகவே, மற்ற கண்டங்களிலுள்ள ஜனங்களுக்கு நல்வழியைக் கற்பிக்குமாறு ஏன் அவதாரம் செய்திரார்? ஆதலின், நாம் எந்த மூர்த்தியையும் எந்த அவதார புருஷனையும் இகழவில்லை. நமது பாரததேசத்தில் பகவான் கிருஷ்ணனாக அவதரித்து நமக்குக் காட்டிய நல்வழிகளை நாம் அனுஸரிப்பது மாத்திரம் நம் கடமை. அவற்றைக் குறைகூறி அநாசாரத்தைக் கொள்வோர் பாபிகளே யாவர். நிற்க, மனோவாக்குக் கெட்டாத பரமாத்மா ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரித்ததால் அவரிடம் மனஸ்பூர்வமான பக்தி செய்வோம். பிரமை கொள்வோம்; அவருடைய திருவடிகளே தஞ்சமென்று சரண மடைவோம். இந்த பக்தி யொன்றினாலேயே நாம் ஈசுவரனைக் காணக்கூடும்; அவருடன் பேசக்கூடும்; ஆநந்த மெய்திடவும் கூடும். உலகத்திலுள்ள அற்ப சுகங்களை யனுபவித்து ஏன் வாணாளை வீணாளாக்கவேண்டுமோ? எப்போதும் கண்ணனுடைய அடியைப் போற்றுவோம். வேணுகோபால விக்கிரகத்தைப் பூஜிப்போம். இரவும் பகலும் அந்த சுந்தர புருஷனுடைய ரூபத்தை மனதிற்கொண்டு மகத்தான ஆநந்தத்தை யடையக்கடவோம்.

## அன்பின் கண்ணீரை யடக்கிக் கோள்தல்.



“இந்த உலகில் அந்த மகானுபாவரைப்போல் யாரும் எனக்கு நடந்ததில்லை. அவரைப்போல என்னைத் தமது குழந்தையாய் ஆதரித்து எல்லா வகையிலும் பிதாவுக்குச் சமமாய் அன்பு காட்டியவர்கள் வேறு கிடையாது. இனிமேலும் கிடைக்கப்போவதில்லை. இந்த ஜென்மத்தில் அந்த தர்மவான்தான் எனக்குப் பெரிய தைரியம்; அவர்தான் என் பெரிய சொத்து” என்று ஒருவர் தன் உள்ளத்தைத் திறந்து ஆர்வத்துடனும் பிறரிடம் கூறும்போது, தன்னை அறியாமலே கண்ணீரும் அன்பின் ஆத்திரமும் பெருகிவிடுகிறது. அப்பொழுது கஷ்டத்துடன் கண்ணீரையடக்கி ஆத்திரத்தைத் தணித்துக்கொள்வதற்காக முகத்தை வேறுபக்கம் மறைக்க நேர்கிறது.

கடவுளை நம்பிய பிராணி என்றும் கைவிடப்படுவதில்லை. தற்போது கஷ்டப்படினும் பின் அவனே யாவருக்கும் மேம்பட்டவனாயிருந்து வாழ்கிறான்.

அமிர்தகுணபோதினி

ஆங்கீரஸஹு ஆவணிமூ 1௨

# புகழ் அடைவதிலுள்ள சிக்கல்கள்.



வலுடன் யாவராலும் ஆசிக்கத்தக்கதும், ஆனால், எவரும் எளிதிற்பெற முடியாததும், விரைவில் தொலையக்கூடியதுமான புகழை நாம் பலவழிகளிலும் அடைய எண்ணுகிறோம். உலகிற் பெரும்புகழ் படைத்து வாழ ஒவ்வொருவனும் விரும்புவது அவனது கடமையேயாகும். புகழ் அடைவதில் ஒருவன் கொள்ளும் இச்சையானது, அவனைத் துன்மார்க்கத்திற்கும் அவமானத்திற்கும் அஞ்சும்படி செய்து ஸன்மார்க்கப் பிரவர்த்தகனுக்குகின்றது. நற்கிரியைகளின் மூலமாகவே தான் ஒருவன் புகழ்மலையைக் கிட்ட முடியும். இவ்வித புகழ்தான் பரிசுத்தமும் உண்மையுமானது. உத்தியோக பதவிகளில் படிப்படியாய் உயர்வதன்மூலமாகவும், தனது சாமர்த்தியமான முயற்சியின் துணைகொண்டும் புகழடை.வோரு முண்டு. இந்த இரண்டாவதான புகழ் மத்திபமானது. நற்செயல்களின் மூலமாகவும் இப்புகழைப் பெறலாம்; தமக்கு இருக்கும் செல்வாக்கைக் கொண்டும், கணக்கற்ற திரவியத்தைச் செலவிட்டு விலைக்கு வாங்கியும், அல்லது ரகசிய துர்க்கிருத்யங்களின் மூலமாகவும் இந்த இரண்டாந்தரமான புகழை யடையலாம். இம்மத்திபமான புகழ் வாய்ந்தோர்க்கு எங்கும் பரவிய பிரஸித்தி இருக்கலாமாயினும், உலைவாயை மூடினாலும் ஊர்வாயை மூட முடியாதாதலின், பொதுஜன அபிப்பிராயம் அன்னோரைப்பற்றி நல்லது கெட்டது எதையும் தெரிந்து வைத்தே இருக்கும். சன்மார்க்கத்தால் புகழ் கொண்டதையும், தந்திர சமர்த்துகளால் புகழுக்குப் பாத்திரர்களானதையும் ஜனங்கள் எளிதில் அறிந்துகொண்டு விடுவார்கள். அதை மறைப்பதற்கு சாத்தியமில்லை. பெரும்புகழ் எய்தினோரிற் சிலர் மிக்க லோபிகளாகவும், தர்மசிந்தனையே யற்றவர்களாகவும், இரக்க சுபாவ மில்லாதவர்

சிலர் பசுத்தோலைப் போர்த்த புலிகளாயிருந்து தங்களியற்கைக் குணத்தை அவர்களறியாமலே வெளிப்படுத்திவிடுகிறார்கள்.

களாகவும், தமது பெயரை விளம்பரப்படுத்துதற்கான வழிகளி லேயே செலவிடுபவர்களாகவும், காமிகளாகவும், தூர்த்தர்களாக வும், இன்னும் மா கொடியவர்களாகவும் இருக்கக்காண்கிறோம். இனி, மூன்றாவதான புகழ் அந்த நிமிஷத்திற்கு மட்டுமிருந்து அடுத்த நிமிஷத்தில் மறைந்து போகக்கூடியது. சிலர் விவாகம் போன்ற விசேஷங்களுக்கு ஏராளமான திரவியத்தை விரயம் செய்து புகழ் பெறுகிறார்கள். சிலர் என்றைக்கோ ஒருநாள் அன்னதானம் நடத்தி அன்றைக்கெல்லாம் புகழ் தாங்குகிறார்கள். பின்னும் பலர் கோலா கலமானவற்றில் பொருட் செலவிட்டுப் புகழுக்குரியோராவர். இந் தப் புகழ் நீடித்து நில்லாததாகி விரைவினில் மறைந்துவிடும். இது கடைபட்ட அதமமான புகழாகும். இவ் அதம வகையிற் காட்டப் படும் நல்லெண்ணங்கள் அந்த நேரத்திற்குமட்டு மிருந்து பிறகு ஒழிந்துபோம். இம்மூவகைப் புகழினில், முதன்மையாக மேலே விவரித்த நற்கிரியைகளின் மூலமாகப் புகழுக்குரியோ ரானவர் மட் டுமே மாண்டும் மாளாப்பெயர் பூண்டோராவர். "தோன்றிற் புக ழொடு தோன்றுக" என்று திருவள்ளுவர் சிறப்பித்ததும்—இவ்வா றான நற்கிரியை களினின்று முதித்த புனிதமான புகழைக் குறித்தே யென்க.

ஃ

இனி, புகழை யடைவதிலுள்ள சிக்கல்களை ஆராய்வோம். கீழ்திசையினின்றும் உதய சூரியன் எழுந்து வருமாப்போல், மனித வர்க்கப் பெருந்திரளினின்றும் முன்னேறி உயர்ந்து புகழுடன் பிரகாசிக்கக்கூடிய ஒருவன் இருப்பானானால், அவனது பெருமை களை மற்றவர்கள் தம்முள் இருக்கும் கேவலமான எண்ணங்களா லும், பொறாமையாலும் தாழ்த்தவோ, கேவலப்படுத்திப் பேசவோ முற்பட்டுக் கொள்கிறார்கள். புகழோங்கி நிற்கும் அப்பெரியோனு டன் தோழமை கொண்டாடுபவர்கள், தம்முடன் தம்மைப்போல் உலகில் அவனும் தோன்றினானெனினும், தம்மைவிடச் சிறந்தோ னாக அவன் பெயரெடுத்திருத்தலின் காரணமாக அவனது புகழை யும் பெருமைகளையும் நோக்கி, அவனை ஒரு உதாரண புருஷ மூர்த்தியாகக்கொண்டு, அவனுடன் ஒப்பிட்டு, தம்முடைய இழிவை எடுத்துப் பிறர் விரித்துக்கூறக் கூடுமென்றும் நாணுவார்கள். தமக்கு நேர்ந்துள்ள தாழ்வினால் தூண்டப்பெற்றோராய் அன்னோர் அப்புக ழடைந்த பெரியோனின் ஒவ்வொரு செயல்களையும் நுட்பமாய் ஆராய்ந்திட முற்பட்டு, எக்காரியத்திலேனும்—எம்மூலையிலேனும்

ஒரு வஸ்துவை ஒருவர் நமக்குக் கொடுக்கிற அன்புக்குத் தக்கபடி அது வெகுநாள் நிலைத்து நின்று நம்முடைய அநேக காரியங்களுக்கும் அருந்துணை யாகிறது. இப்படியே நமது அன்பர்கள் உதவும் பணமும் வெகு நல்ல காரி யத்திற்கு உபயோகமாகிறது.

சாமான்யமான ஒரு அற்ப குற்றம் தென்படுமாகில், அதனை எடுத்துப் பிரமாதமாக்கி அவனது புகழிற்குப் பங்கம் விளைத்துத் தாழ்த்தி, இப்போது தாமும் அவனும் ஒரே சமமாக இருக்கின்றோமென்ற மனத்திருப்தி கொள்வர்.

ஃ

இதைப்போலவே, முதலில் சிறிது புகழடைந்தோர் தம்மைப் போல் மற்றும் சிலரும் சிறிது சிறிதாகப் புகழடைவதைப் பொறுமைக்கண்களுடன் உற்றுநோக்கி, ஆத்திர சிந்தையுடன் அவர்களின் புகழிற்குப் பங்கம் நேரும் செயல்களை விளைத்து, அதனால் தங்களின் புகழிற்கு உயர்வான அஸ்திவாரம் போட்டுப் பலப்படுத்தி விட்டு, அவர்களினும் தாங்கள் அதிகமான நீண்ட புகழ் கொண்டிருப்பதாக மனோ சமாதானம் செய்து கொள்வர்.

ஃ

புகழ்பெற்ற பெரியோனொருவனுடன் சமமான கீர்த்திவந்தர்களாயிருப்பவர்களோ, தம்மைவிட அவன் சிறந்தோனாகிறான் என்னும் காரணத்தைக்கொண்டு பொறாமைப்படுவர். அப்புகழ் மிகுந்த பெரியோனோ தனது ஸ்தானத்திற்கு மற்றும் சிலர் தகுதி பெற்று வருவதை நோக்கித் தன்னைப்போல அவர்களும் புகழடைவதா என்று ஆத்திரப்பட்டுப் பொறாமைக் காய்ச்சல் மிகுவதும் இகழ்வதுமுண்டு. இது உலக இயற்கை.

ஃ

மேலும், இவ்வாறு கீர்த்தியை ஸம்பாதித்தோன் பலருடைய பார்வையையும் தன்னிடத்தில் இழுத்துக் கொள்வோனாகி, தன்னுடைய ஒவ்வொரு செயலையும் மற்றவர்கள் கவனித்துப் பார்க்குமாறு அன்னோரின் உள்ளத்தில் ஒரு தூண்டுதலையும் எழுப்பி விடுகிறான். அவ்வாறு அவனையே கண்ணுங் கருத்துமாய் நோக்கி நிற்போர் அவனைக் கேவலமாகத் தாங்கள் எண்ணுவதற்கு ஏதேனும் ஒரு சந்து கிடைக்கும் வரையில் மனநிம்மதி யடையார். உலகில் ஒரு பெரிய மனிதனுடைய கீர்த்தியை எதிர்த்தும், இன்னும் அநேக வழிகளில் அவர்களுடைய புகழுக்குப் பங்கம் விளைவித்தும் அதனால் இன்பம் அனுபவிக்கிறவர்கள் எத்தனையோ பேராவார். அவ்வாறு குற்றம் கண்டுபிடிப்போர் மற்றெவராலும் கண்டுபிடித்து உலகுக்குக் காட்டாத ஒரு பெரிய சமர்த்தைத் தாங்கள் காட்டிவிட்டதாகவும்,

---

அதிக எச்சரிக்கையாய் நடப்பவன்தான் பன்முறை படுகுழிகளில் விழுந்து கரையேறவேண்டி யிருக்கிறதேயொழிய அவ்விதமில்லாதவர்கள் எந்தப்படுகுழியிலும் விழக்காணோம்.

அப்பெரியோன் இப்போதடைந்திருக்கும் பெயருக்குச் சற்றும் அருகனல்லவென்ற உள்மர்மத்தைத் தாங்கள் கண்டறிந்து சொன்னதுபோல் மற்றவர்கள் சொல்லவில்லை யென்பதாகவும் கூறிக் கொண்டு தங்களை சிலாகித்துக்கொள்வர். மற்றும் சிலர், பிறாது புகமூக்கு இடையூறாக இன்னின்ன வழிகளில் அவர்கள் குற்றமும் தவறுமாய் நடந்துகொண்டிருக்கிறார்களென்று காண்பிக்கும் போது, தங்களிடம் மட்டும் அவ்விதமான பிழைபாடுகள் சிறிது மில்லை யென்பதாக உலகிற்குத் தங்களைப் பகிரங்கப்படுத்திக் கொண்டு அவ்வகையில் தங்களை மேலோராக உயர்த்திக்கொள்வர்.

ஃ

இவ்வாறு குற்றம் கண்டுபிடிப்போர் எப்போதும் தங்களிடத்திலுள்ள குற்றத்தையே அவர்களிடத்திலும் இருக்கிறதாவென்று பார்ப்பார்கள். தாங்கள் ரகசிய விபசாரம் செய்வோராயிருந்தால் தங்களைப்போலவே அவர்களும் செய்யக்கூடியவர்களா யிருக்கக்கூடுமோ வென்று சிரத்தையுடன் ஆராய்வார்கள். அவ்வாறு, தம் குற்றமே அவர்களிடத்திலும் தோன்றினால், அப்போது தாங்கள் அப்பெரியோனுடன் சரிசமானமாக அமர யோக்கியதை உள்ளவர்களென்றும், இக்குற்ற வகையில் தாங்களும் அப்பெரியோனும் ஒரே நிலையிலுள்ளவர்களென்றும் கருதிக்கொண்டு குதூகலமடைவர். இவ்வித உபாயங்கள் பலனடையாவிட்டால், இவர்கள் அப்பெரியோரைப் பற்றித் தம்மைச் சூழ்ந்திருப்பவர்களுடன் பரிகசித்துப்பேசி மதிப்பில் தாழ்த்துவர். இப்படி அநேக வழிகளில் கீர்த்திவந்தனான ஒரு பெரியோன், தான் சிறிதும் இவ்வாறு தனக்கு ஸம்பவிக்குமென்று எண்ணுகிருக்கையிலேயே பல இடுக்கண்களுக் காளாகிறான். புகழ் தேடியவனுக்குள்ள இவ்வித கஷ்டங்கள் அந்தப் புகழினை நாடாத சாமான்னியனுக்கு ஏற்படுவதில்லை.

ஃ

பொதுவாக, ஒரு பெரிய மனிதன் எவ்வளவு பிரக்யாதி அடைந்திருக்கிறானென்று நாம் தூரத்திலிருந்து கேட்கும் அவ்வளவு, நாம் அவன் ஸமீபத்தில் செல்லுகையில் சாதாரணமாக அறிவதில்லை. அருகே நெருங்கிய பின் அக்கீர்த்திவந்தனின் பெருங் குற்றங்களையும், பலஹீனங்களையும், அவன் வீட்டிலேயே அவனுக்கு மதிப்பின்றிக் கிடப்பதையும் கேட்காதிருக்கமுடியாது. இவைகளுக்குள்ள காரணங்களையும் எளிதில் அறிந்துகொள்ளலாம். புகழடைந்தோன் தன்னை யொத்தவர்களிடமே குலாவுவதால்,

---

நீ எவ்வளவுதான் உண்மையாக நடந்தாலும் உன்னை வெறுப்போருக்கு ஒவ்வொரு செய்கையும் குற்றமாகப்படும்.

மற்றவர்கள் தங்களை யவன் மதிக்கவில்லையென்று பழிக்கிறார்கள். ஒரு கற்றறிந்த மேதாவி கல்லாத சாமான்யர்களாயுள்ள பந்துக்களிடமும், உறவின் முறையான பெண்களுடனும் எவ்வளவு நேரம்தான் ஓயாது பேசமுடியும்? பேசுவதற்குச் சரக்குதான் என்ன இருக்கிறது? எந்த நூல்களிலிருந்தும் விஷயங்கள் எடுத்துக்கொண்டு அவர்களோடு பேசுவது? அப்படிப் பேசினாலும் அவர்களுக்கு அது விளங்குமா? ஆகவே, ஸம்பாஷணையும் சீக்கிரமே முடிந்துவிடுகிறது. அந்த பந்துக்களோ அக்கீர்த்திவந்தன் தங்களை லக்ஷியமே செய்யவில்லையென்றும், முகம்கொடுத்துச் சரியாகப் பேசவில்லையென்றும், எந்தக் காலத்தில்தான் அவன் வாய்திறந்து சரியாகப் பேசினான் என்றும் தூற்றுகிறார்கள். புகழடைந்த பெரியோனோ இதுபோன்றவற்றில் தன்மீது குற்றமில்லாதபடி நடந்துகொள்ளவேண்டுமென்பதையறியாது போகிறான். ஒரு சமயம் அறிந்தாலும் அதைச் சீர்திருத்திக்கொள்ள அவனால் முடிகிறதில்லை. எப்படி முடியும்? கல்வி ஞானமற்ற ஒரு உறவினனோடு அக்கீர்த்திவந்தன் எவ்வளவு நேரம்வரையில் தான் வெட்டி வார்த்தைகளாடிக்கொண்டிருப்பது? இது சகிப்பதற்கியலாததன்றோ? அந்தப் பேச்சுகளில் இன்பமும் இல்லையன்றோ? இதன் பயனாக மற்றவர் தன்மீது குற்றஞ்சாட்டும்படியாய் சந்துவிட்டுக்கொள்ள நேர்ந்துபோகின்றது. மேலும் புகழ்வாய்ந்தோனுடன் அதிகமாகப் பழகுங் காரணத்தாலும் அவனைத் தங்களைப்போலொத்த சாமான்ய மனிதனாக மற்றவர்கள் மதித்துவிடுவதன்றி அலக்ஷியமும் செய்கிறார்கள்; அவமதிக்கவும் முற்படுகிறார்கள். இதனாலேயே அவனுடைய புகழ் கெட்டுவிடாது. மதிப்பவர் எங்குமே மதிப்பர்.

ஃ

பெருந்தன்மை பொருந்தியவனும், தன் கருமத்தில் ஜெயமடைவதிலேயே கருத்துள்ளோனுமாகிய ஒரு கீர்த்திவந்தன் இவ்விதமான சிறு குற்றங்கள் தன்மீது சாற்றப்படுவதைப் பொருட்படுத்தாது தன்னுடைய புகழுக்கு மேன்மேலும் கட்டிடம் கட்டி உறுதிபடுத்திக்கொள்வான். ஆனால், இவ்வாறு பெயரெடுக்கும்போது, தன்மீது பெருங்குற்றங்கள் சுமத்தப்படுகையில், அவற்றிற்குங்கூட முன்போல் அலக்ஷியம் காண்பித்து அக்குற்றங்களைத் தன்னிடமிருந்து நிவர்த்திக்க முயற்சியாமல் தன் வேலையிலேயே கண்ணுங் கருத்துமா யிருப்பானாகில், இந்த ஆழமான பெருங் குற்றங்கள் அவனை மேலெழும்பவிடாமல் அவனுக்கு சமீபத்திலிருப்பவரின் முன்னிலையில் அவனைத் தாழ்த்தி அவனுடைய கருமங்களையும் எண்ணங்களையும் பாழ்படுத்தி அல்லலில் அமிழ்த்திவிடும்படியாகலாம். அவனிடத்தில் தோன்றும் ஒரு சிறு குற்றமானது

"கோழையர் எங்ஙனம் கூடுவா ரின்பம் ?

அவன் அடையும் பெரும் புகழில் மறைந்துவிடக்கூடும். ஆனால், அவன்மீது சுமத்தப்படும் பெருங் குற்றமோ அவன் மற்ற விஷயங் களில் அடைந்துள்ள கீர்த்திக்கு அவதூறு விளைத்து அவனைப் பிறர் கேவலமாக எண்ணச்செய்துவிடவல்லது. அவன் முன்பு பரோபகாரியாயிருந்தது உண்மையானாலும், தற்போது தன் புக ழைக்கொண்டே செல்வம் சேர்த்துக்கொள்ளும் சுயநலப் பிசாசாக அவன் மாறிப்போனானென்றும் உலகம் தூற்றுகிற பெருங் குற்றத் தினின்றும் அவன் தப்பித்துக்கொள்ள முடியாதவனாகிறான். அவ னது சுயநலம் பகிரங்கமாய் விடுகிறது. ஆகையால், கஷ்டப்பட்டு அடைந்த புகழைப் பாதுகாக்கப் பின்னால் எவ்வளவோ சிரமப்பட வேண்டியிருக்கிறதென்பது இதனால் நன்கு விளங்கும்.

ஃ

இப்புகழடைந்த பெரியோனிடம் தோன்றும் குற்றங்கள் பிற ரிடத்தில் கிடையாவா? அவனிடத்தில் மட்டுமே தோன்றினவையா? பின் ஏன் அவனுடைய புகழுக்கும் கீர்த்திக்கும் பங்கம் தேடவேண் டுமோ? அவன் உயர்ந்தோனாயில்லாது சாமான்னியனாயிருந்தால் அவன் குற்றங்களை உலகினர் பொருட்செய்யார். அவன் மேன்மை யான நிலையிலிருப்பதினாலேயே அவன் தவறிச் செய்துவிடும் பிழைகளை அவ்விதம் அவன் தவறியிருப்பது அவன் புகழுக்குப் பொருந்தாதென்று உலகம் எடுத்துக்காட்ட முற்படுகிறது. ஆகவே, அப்புகழடைந்தவன் எவ்வெப்போதெல்லாம் தன்மீது இவ்வாறு குற்றம் சாற்றப்படுகிற தென்று ஆராய்ந்து கண்டுகொண்டு, அக்குற்றங்கள் மறைந்துபோகும் வண்ணமாக இன்னும் பல அரிய காரியங்களைச்செய்து அவற்றின் மூலமாய்த் தன்னுடைய மாசுபட்ட புகழைப் புதுப்பித்துக்கொண்டு விடவேண்டும். ஏனெனில், தனது தூற்றப்படும் நிலையையும், தன் புகழ் குறைவதையும் கவனிக்காதிருந்தால், அதிசீக்கிரத்தில் தானே அவனது கீர்த்தி தள்ளாடி அழிந்துவிடும். பிறரால் துதிக்கப்பட்டு விரும்பப்படுவது எப்போதும் கொஞ்சகாலத்துச் சங்கதியே. முன்னர் எவ்வளவோ புகழடைந்தோர் பிற்காலத்தில அவர்கள் இறந்ததைக் கூடச் சொல்வோரில்லாமல் சாமான்யராகி மறைந்துபோனார்கள். ஆகவே, தாம் தற்போது அடைந்துள்ள புகழினை, மேன்மேலும் புதிய அற்புத சங்கதிகளைச் செய்துகொண்டு சென்று அவற்றின் காரணமாக வரும் கீர்த்தியில் ஊறவிட்டு சதா தண்ணீர் வார்த்துச் செவ்வனே வைத்திருந்தாலொழிய அச்செடி விரைவில் வாடிவிடும். மிகவும் கீர்த்தியடைந்த எத்தனையோ பேர்கள் இதைக் கவனிக்கா

---

ஒரு மனிதன் அகாரணமாயும், அநாவசியமாயும் கோபித்துக்கொள்ளும் போது, அவனது கோபம் நியாயமற்றது என உடனே எடுத்துக்காட்டிவிட் டால் பின்னால் நீ அவனைச் சமாதானம் செய்ய அதிகப்பிரயாசை எடுத்துக் கொள்ளகோராது.

திருந்துவிடுவதால், அதன் பயனாக, தாங்கள் எவ்வளவு கீர்த்திக்கு அருகரென்று எண்ணினார்களோ அதைத் தாங்களே தாழ்த்திப் பல படிகள் குறைந்திட்ட நிலையை அடைய ஏதுவாகின்றது. இவ்வளவு கஷ்டங்கள் இருப்பினுங்கூட, இந்தக் கீர்த்தி என்பது எவ்வளவோ ஸந்தோஷமா யிருக்கிறதென்றெண்ணி, இடையிடையே எத்தனையோ அவதூறுகள் வந்து ஸம்பவிக்குமென்பதை யறிந்திருந்துங் கூட, அதைப் பொருட்செய்யாது இப்புகழினை நாடி யடைய விரும்புவோரே அதிகமாவார். சிறிது புகழடைவதற்குள் எவ்வளவோ கஷ்டப்படவேண்டியிருக்கு மென்பதையும், அதில் நேரும் சோதனைகளையும், வீழ்ச்சிகளையும், அப்புகழின் காரணமாகச் சிறிது பூரிப்பு இருப்பினும் மிகுந்த மனச் சஞ்சலமே தோன்றக்கூடுமென்பதையும் பலர் நன்றாக அறிந்திருந்தாலும், புகழினை அடைய எத்தனிப்பவர்களுக்குக் கணக்கில்லை. மற்றவர்கட்கு நேர்ந்த கஷ்டங்கள் தங்களுக்கு வாராதென்பது இன்னோரின் மௌடீகமான எண்ணம். இனி, தாம் இழந்த புகழை மீண்டும் அடைய முயற்சிப்பார் மற்றொரு சாரார்.

ஃ

புகழ் தேடுவதில் எவ்வளவோ கஷ்டங்களிருப்பினுங்கூட, அந்தப் புகழினிடம் கொண்டுள்ள ஆர்வமானது நமக்குத் தெரியாமலே நமது மனத்தில் ஒரு புதிய ஊக்கத்தை எழுப்பிவிட்டு நாம் மேற்கொண்ட காரியத்தில் நமது மூளையைச் சரிவர உபயோகிக்கச் செய்கிறது. நாம் விரும்பும் எதையும் அந்தப் புகழின் வழியாகப் பெற்றுக்கொள்ளவும் முடியலாம். ஆனால், புகழ்—கீர்த்தி என்பதெல்லாம் ஒரு அன்னிய தேசச் சரக்கேயாகும். அதாவது, வெளியிலிருந்தே அந்தப்புகழும் கீர்த்தியும் வரவேண்டியதாயிருக்கிறது. வெளியில் புகழ் பரவிய பிறகே உள்ளூரிலிருப்போர் மதிக்கத்தொடங்குகிறார்கள். மற்றபடி, நமது ஊரிலிருந்தே அப்புகழை எதனாலும் அடையமுடியாது. கீர்த்தி பெறுவதென்பதே நமது சக்திக்கு மீறின சங்கதியாகும். கீர்த்தியை நாம் அடைவோம் என்று எண்ணுகையிலேயே நம்மனம் புளகாங்கிதமடைகிறது. ஆனால், அக்கீர்த்தியானது நம்மை மனோ நிம்மதியில் வைக்காமல் தற்காலம் நாம்கொண்ட விருப்பத்தையும் பூர்த்திசெய்யாமல், புதிய புதிய வெவ்வேறு விருப்பங்களுக்கு வழிகாட்டி நம்மைப் பல வழிகளில் இழுத்துப்போய் முடிவில் எதிலுமே காரியசித்தியைக் காட்டாமல் மனோ ஸஞ்சலமடையச் செய்வதுமுண்டு. புகழ்ச்சியடைய விருப்பம்கொண்டோரிற் பெரும்பாலோர் தாங்கள் எவ்வளவு உயரவேண்டுமோ அவ்வளவுக்கு உயர்ந்தபின், தாங்கள் விருப்பங்கொண்ட புகழின் ஆவல் நிறைவேறிவிட்டதென்று அத்துடன் ஒதுங்கிக்கொண்டு பின்னால் மனோ நிம்மதிகொள்ள விரும்புவதில்லை. இப்போது தாங்கள் ஏறிய படிகளுக்கு மேற்பட்டும் ஏறி உயர எண்ணி மேன்மேலும் கஷ்-

டத்தை ஏற்றுக்கொள்கிறார்கள். எனவே, இவ்வளவு புகழ் தமக்குப் போதுமென்ற திருப்திகொள்வோர் அரியராகின்றனர். இது புகழ் எனும் மாயாதேவியின் மயக்குச் செய்கையாகும்.

ஃ

அநேகர் உண்மையாகவே தாங்கள் விரும்பிய புகழினை அடைவதற்காக முயலுவதை விட்டு ஒதுங்கிவிடுகின்றனர். இது அவர்களுக்குற்ற எதிர்பாராத இடுக்கண்களாலாவது, நஷ்டங்களினாலாவது, புகழ்ச்சியினால் அடைவது சிறிதளவு ஸந்தோஷமேயென்று அவர்கள் அறிந்துகொண்ட நீண்ட அனுபவத்தினாலாவது, தங்களின் வயது முதிர்ந்த காலத்தினாலாவது, தங்கள் புகழை நோக்கிச் சந்தோஷப்படக்கூடிய தம்மைச் சேர்ந்தோரெல்லாம் மரித்துப்போனதினாலாவதுதான் இருக்கும். ஆனால், தாங்கள் அடைந்த கீர்த்தி போதுமானதென்று அவர்களுங்கூட மனஸ்பூர்வமாய் ஒருபோதும் மனநிம்மதியடையார். புகழ்—அதாவது கீர்த்திக்கே இவ்வித மனஸ்பூர்வமான போதுமென்ற திருப்தி கிடையாது. அது எப்போதும் தன்னை விரும்பி நிற்போரைப் பல இடுக்கண்களிலும் இழுத்துக் கஷ்டத்தை விளைவிக்கும். எவருமே தாங்கள் விரும்பிய புகழினையடையாவிட்டால் எவ்வளவோ மனமுடைந்து போகிறார்கள். தாங்கள் எண்ணிய அளவுக்கு உயராவிட்டால் தங்களை எவ்வளவு பேர்கள் தங்களின் விருப்பத்தைப் பரிகசித்து இழிவுபடுத்தக் கூடுமோவென்றும் விசாரப்படுகிறார்கள். நாம் எவ்வளவு உயரவேண்டுமென்று எண்ணுகிறோமோ அதற்கேற்பப் பிறருடைய ஒத்தாசைகளையும் நாம் பெறவேண்டியவர்களாகிறோம். நாம் விரும்பும் உயர்வுக்கு நாம் அருகரே என்று எண்ணி நமக்காக உழைப்போரும், நம்மைப்பற்றிப் பிறரிடத்தில் சிரேஷ்டதரமாய்ப் பேசுவோரும் நமக்கிருந்தாலன்றி நாம் உயருவது கடினமாகும். இவ்வித சபயங்களில், கீர்த்தியடைய எண்ணிய அவன் மனதே அவனைத் திட்டச்செய்கிறது. உண்மையில் அவன் புகழையே அடைந்தாலும், அவன் மனதில் தன்னைக் குறித்துப் பிறர் பேசும் அவதூறுகளுக்காக வருத்தப்பட்டுக்கொண்டிருப்பான். ஆகையால், புகழ் அடைந்தோன் பலரால் போற்றப்பட்டும், சிலரால் இகழப்பட்டும், அவ்விகழ்ச்சியால் மனம் நோந்தும் அவதிப்படுவோனாகிறான். உலகம் எப்போதும் குற்றங்களையே அதிகமாகப் பாராட்டிப் பேசுவதால், அவனுடைய குற்றங்கள் அவனுடைய புகழைவிட அதிக வியாபகமுடையதாகி, அதனால் அவன் போற்றப்படுவதற்குப் பதிலாக இகழ்வாய்க் கூறப்படுகிறான். இவ்வகையினன் தான் இழந்த புகழுக்காக வருந்திக்கொண்டிருப்பானே தவிர, அதற்குமுன் தானடைந்திருந்த வியாபகமான புகழுக்காக ஸந்தோஷமடையான். சென்றுவிட்ட புகழை எண்ணி யாதுபயன்? செலவிட்ட பணத்தை நினைத்துப் பார்ப்பதில் என்ன லாபம்?

ஃ

இங்ஙனமாக, 'புகழ்' என்பதானது நம்மை அல்லலில் இழுத்து அவதிப்படுமாறு தூண்டுகிறது. புகழ் பெறுவதின் பொருட்டாக ஆதியில் நம்மனத்திடையே எவ்வளவோ உற்சாகம் கொண்டோம். அதற்காகப் பல கஷ்ட நஷ்ட சோதனைகட்கும் துணிந்தோம். அப்பால் அப்புகழினை நாம் அடைந்தபின், சந்தோஷப்படாமல் அதிர்ப்தியையே மேன்மேலுங் கொண்டோம்; பல கவலைகளாலும் நெருக்குண்டு தவித்தோம். இவ்வாறெல்லாம் நாம் வருந்தினும் அந்தப் புகழ் கடைசியில் மிகவும் சிறிதளவே நமக்கு இன்பம் அளிக்கின்றது. அதுவும் அதற்காக வருந்தி முயலும் பலருக்கும் கிடைக்காமல், குறித்த ஒரு சிலரே அதனைப் பெறுவோராகிறார்கள். அவ்விதம் பெறுவதற்கும் பிறருடைய துணையும் உதவியும் இருந்தாலொழிய அடைய முடியாததாகிறது. உலகிலுள்ள பலரும் நம்மைத் தூஷிப்பதே அதிகப்பட்டு, அதன் பொருட்டு நெஞ்சம் புண்ணாகிக் கண்ணீர் பெருக்கவும் நேர்ந்து, நாம் எக்காலத்தில் பிறருடைய ஆதரவால் கைதூக்கப்படவேண்டுமோ அக்காலத்தில் கைவிடப்பட்டுப்போய், அவர்களுடைய இகழ்வான பேச்சுக்குத் தகுந்தவாறு எழ்மைப்பட்டு நமது புகழும் அத்துடன் மறைய நேர்வதுமுண்டு. தீயோரின் துஷ்டவாக்கே பல சமயங்களில் பலித்துப் போகிறது. நல்லோரின் நல்வாக்கு அவ்வாறு பலிப்பதில்லை. இதுவும் ஒரு விநோதமே.

ஃ

புகழடைவதிலேயுள்ள இவ்வித சிக்கல்களினின்றும் விடுபடுவதற்கு ஒரேயொரு வழிதானுண்டு. ஒருவன் அடையும் புகழ் பலமான சன்மார்க்க அஸ்திவாரத்தின்மீது இருக்கவேண்டும். ஒருபோதும் ஒழுக்கம் தவறவொண்ணாது. எந்த ஒரு கடமையையும் முயற்சியையும் பகவத் பிரீதியாகச்செய்து, அதனால் வருவது புகழ்ச்சியோ, இகழ்ச்சியோ அதனைப் பரமனுக்கே அர்ப்பணம் செய்துவிட்டு, நமக்கென்று இறைவனார் நியமித்த கடமையை நாம் சரிவரச்செய்து முடித்தோமென்ற திருப்தி ஏற்றுப் பரிசுத்தராவதே புகழின் சிக்கல்களை வெல்லும் வழியாகும். "எல்லா தர்மங்களையும் விட்டு விட்டு என்னை ஒருவனையே ஸரணமாக அடைவாயாக; நான் உன்னை ஸமஸ்த பாவங்களிலிருந்தும் விடுவிக்கிறேன்; துக்கிக்கவேண்டாம்" என்கிறார் பகவான். இங்ஙனம் ஒழுகலே இவ்வுலகவாழ்வின் சூக்ஷமுமாகும். புகழுக்குரியதான ஒரு காரியத்தைத் தனது கடமையாகச் செய்துவிட்டு, அதனால் உண்டாகக்கூடிய புகழினை ஒரு பொருட்டாக மதியாமலும், அப்புகழினை எதிர்பாராமலுமிருப்பவனே உண்மையான புகழ்கொண்டவனாவான். உலகும் அவனையே போற்றித் துதித்திடும். அவனையே புகழ் தேடிக்கொண்டு செல்லும்.

# ஸ்ரீ கிருஷ்ண சைதன்ய ஸ்வாமிகள்

(சுருக்கமான சரித்திரக் குறிப்பு)

வங்காளத்தில் நவத்வீபம் (நாதியா—Nadia) என்ற நகரில் கி. பி. 1486–ம் ஹூ பங்குனி மாதம் ஜெகநாத மிஸ்ரா ரென்பாருக்கும் சசிதேவியம்மை க்குமாக அவதரித்தார். 13-வது மாதம் தாயின் கர்ப்பத்திலிருந்து பிறந்தார்.

## கதா பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| 1. | ஜெகந்நாத மிஸ்ரர் | ஸ்ரீ சைதன்யரின் தந்தை. |
| 2. | சசிதேவி | ஸ்ரீ சைதன்யரின் மாதா. |
| 3 | கௌரங்கர் | சைதன்யரின் பால்ய நாமம். |
| 4. | திருடன் | கௌரங்கரைத் தூக்கிச்சென்றவன். |
| 5. | ஹிரண்யர் | பக்கத்து வீட்டார். |
| 6. | கிழவர் | மெய் மறந்து ஆடியவர். |
| 7. | முராரி குப்தர் | அத்வைதி. |
| 8. | விஸ்வருபர் | கௌரங்கனின் தமயன். |
| 9. | விஷ்ணுப் பிரியை | 2-வது மனைவி. |
| 10. | ஹரிதாஸர் | ஹிந்துவான முஸ்லிம். |
| 11. | ஸந்யாசி | கௌரங்கருக்கு சந்யாசம் தந்தவர். |
| 12. | நவாப் | நவத்வீப அரசன். |
| 13. | சார்வபௌமர் | சமஸ்கிருத பண்டிதர். |

1. குழந்தைப் பருவத்தில் கௌரங்கர் சில சமயங்களில் ஓயாது அழுவார். ஹரி என்று சொன்ன மாத்திரத்தில் அழுகை நின்றுவிடும். கௌரங்கன் சாதிபேத மின்றி எவர் கூட்டத்திலும் கலந்து விளையாடுவான். பாம்பு முதலியவற்றைப் பயமின்றிப் பிடித்து வேடிக்கை செய்வான்.

2. கௌரங்கன் ஆபரணாலங்கிருதனாய் வெளியில் விளையாடி நிற்க, ஒரு திருடன் நகைகளை யபகரிக்கத் தூக்கிக்கொண்டு போகிறான். நடுவழியில் அவனுக்குப் புத்தி உதயமாகிக் குழந்தையை வணங்கி வீட்டில் விட்டுச் செல்கிறான். முடிவில் அவன் பக்திமானாகிச் சன்னியாசியாகிறான்.

3. கௌரங்கனின் மார்பில் சந்திரோதயம் தோன்றுகிறது. தேகமுற்றும் ஜோதி. மற்றோர் சமயம் அவர் உட்கார்ந்திருந்த அறை முற்றிலும் பிரகாசம். சசிதேவி பயந்து அலறி பேயோ பிசாசோ கௌரங்கனைப் பிடித்திருப்பதாய்ப் பிரலாபிக்கிறாள்.

4. கௌரங்கன் சிறுவர்கள் கூட்டத்தில் மலர்மாலை யணிந்து ஹரி ஹரி யென்று நர்த்தனம் செய்கிறான். சிறுவர்களும் நர்த்தனம் செய்கின்றனர். அங்கு வந்த கிழவனும் தன்னை மறந்து இவர்களுடன் ஹரி ஹரி யென்று நர்த்தனம் செய்கிறான். சசிதேவியம்மாள் வந்து அதிசயப்பட்டு கௌரங்கனைத் தூக்கிக்கொண்டு வீட்டுக்குச் செல்லவே, சிறுவர்களும் கலைய, கிழவரும் தாம் தம்மை மறந்து ஆடியதற்கு நாணுகிறார்.

5. எடுத்தெறிந்து விட்ட அசுத்தமான மட்பாண்டங்களின் மத்தியில் கௌரங்கர் வீற்றிருக்க, தாயார் வாவா என்று கண்டித்து, அழைத்து அசுத்த பாண்டங்கள் பக்கம் போகலாமாவெனப் புத்தி போதிக்கிறார். சுத்தம் அசுத்தம் என்பது வெளிவேஷம் என்று கௌரங்கன் கூறுகிறான்.

6. பக்கத்து வீட்டு ஹிரண்யர் என்பவர் ஏகாதசியன்று பகவானுக்காகத் தளிகைபோட ஏற்பாடு செய்திருக்க, அதை முதலில் தாமே யுண்ண வேண்டுமென்று ஓயாது அழுகிறார். இவ்விதம் கேட்கலாமோவெனத் தாய் தந்தையர் தவிக்கின்றனர். இச்சமயம் ஹிரண்யர் கூடை நிறையத் தளிகை கொண்டுவந்து நீயே கண்ணபிரானின் அவதாரம் என்றுகூறி அவர் முன் வைத்து வணங்க, அதில் சிறிது புசித்து மற்றதை வெளியில் வாரி இறைத்து உட்செல்லுகிறார்.

7, கௌரங்கனைப் பூதபைசாசங்கள் பிடித்திருப்பதாகத் தாய் தந்தையர் மற்றவர்களுடன் கலந்து தீர்மானித்தல். அச்சமயம் கௌரங்கர் நானு ஒருவரை வணங்குவது, என்னையே எல்லோரும் வணங்கவேண்டும் என்று சொல்ல, யாவரும் ஆச்சரியப்படுகின்றனர். சாந்திக்காக சஷ்டியம்மனுக்குப் பூஜைபோடத் தீர்மானிக்கிறார்கள்.

8. சஷ்டியம்மன் கோயில் :—தாயார் பொங்கலுடன் கோயிலுக்குட் புக, உள்ளேயிருந்து கௌரங்கன் வர, தாயார் ஆச்சரியப்பட, அந்தப் பொங்கலை அம்மனுக்குப் படைக்குமுன் தனக்குத் தரும்படி கேட்க, தாய் மறுக்க, கௌரங்கன் பசி பசி யென்று அழுது பொங்கலைக்கேட்க, தாய் வெறுப்புடன் தர, அதைப்புசித்து ஓடி விடுகிறார். தாய் அம்மனை வணங்கி மறுபடி பொங்கல் சமைத்துக்கொண்டு வருவதாய்ச்சொல்லி மன்னிக்கும்படி வேண்டி வீட்டுக்குப் போகிறார்.

9. முராரி குப்தர் தமது நண்பருடன் கடவுளும் நானும் ஒன்று என்று அத்வைதமாக ஆவேசமாய்ப் பேசித் தெருவில் செல்ல, கௌரங்கன் அவரை நோக்கிச் சிரிக்க, அவர் திரும்பிப்பார்த்துக் கோபிக்க, கௌரங்கன் அவரைக் கேலிசெய்ய, முராரி இவரைத் துஷ்டப்பயலே என, அதற்குக் கௌரங்கர் அப்படியாயின் இன்று நீர் புசிக்கையில் புத்தி சொல்லுகிறேன் என்கிறார்.

10. முராரி குப்தர் இலையில் புசிக்கப் போகும்போது கௌரங்கன் திடீரென்று அங்குதோன்றி இலையில் மலபாதை செய்துவிட, முராரி திகைத்துப் பதைக்க, கௌரங்கன் "நீ சகல ஜனங்களுககும் கெடுதி விளைக்கும்படியான போதனை செய்ததற்கு இது சிக்ஷை" என்று சொல்லி மறைகிறார்.

---

எவ்வளவு கீர்த்திவாய்ந்தவர்களாயினும், அவர்களது அற்ப தவறுதல் அவர்களது பிற்கால உயர்வைக் கெடுத்துவிடக்கூடும்.

முராரி பயந்து, ஓ இது கிருஷ்ணனே யென்று தெளிந்து கௌரங்கர் வீட்டுக்கு வந்து அவரை வணங்கித் துதிக்கிறார்.

11. கௌரங்கனின் தமயனுரான விஸ்வரூபருக்கு விவாகப் பேச்சு நடக்கிறது. அவர் ரகசியமாய் சன்னியாசியாகி மறைகிறார். தாய் தந்தையர் பிரலாபிக்கின்றனர்.

12. கௌரங்கருக்கு உபாயனம் நடக்கின்றது. அச்சமயம் மூர்ச்சையாகிறார். திவ்ய தேஜஸ்வின் பிரகாசம் அவர்மீது தென்படுகிறது. பிறகு தெளிகிறார். ஒரு ஏழை பக்தியுடன் கொட்டைப் பாக்கு தர, அவர் அதைப் புசித்தபடியே தாயாரை அழைத்து, "நான் போகிறேன். குழந்தையைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்" என மொழிகிறார். தாய் மறுபடியும் தோன்றிய திவ்ய தேஜஸைக்கண்டு பயப்பட, கௌரங்கரும் மூர்ச்சையாகிறார்.

13. கௌரங்கரின் பிதா அந்திய மடைகிறார்.

14. பள்ளிக்கூடத்தில் கௌரங்கன் வாசிப்பு. ஸமஸ்கிருத இலக்கணத்துக்கு உரை எழுதுதல், தர்க்க சாஸ்திரபாடம். ரகுநாதர் தர்க்கசாஸ்திரத்தில் ஒரு கேள்விக்கு விடை தெரியாது திகைக்க, கௌரங்கர் அதை அல்பமாய் எண்ணி விடைகூறல். பிறகு தர்க்கசாஸ்திரம் எழுதல். ரகுநாதர் தான் எழுதியதைவிட சிலாக்யமாயிருப்பதால் தனது சாஸ்திரம் வீணாகிறதேயென, கௌரங்கர் தனது சாஸ்திரத்தைக் கிழித்து ஆற்றில் எறிந்துவிடல்.

15. கௌரங்கருக்கும் லக்ஷ்மிக்கும் விவாகம் நடக்கிறது.

16. கேசவபண்டிதரை வாதுக்கு அழைத்துக் கர்வபங்கம் செய்து ஐந்து குற்றங்களை கௌரங்கர் எடுத்துக் காட்டுகிறார்.

17. லக்ஷ்மீ காலமானதால் விஷ்ணுப்பிரியை இரண்டாவது மனைவியாகிறாள்.

18. கௌரங்கர் தம் ஊரிலுள்ள கடைக்காரர்களை சோதித்தல். தமக்கு வேண்டிய புதுத் துணிகளைப் பெற்றுக்கொண்டு தம்மிடம் பணம் இல்லையெனல். அவர்கள் பணம் வேண்டாமென்று வணங்கி எடுத்துப்போகும்படி வேண்டல். வீட்டுக்கு வந்தபின் அவற்றின் விலையை அனுப்பிவிடுகிறார்.

19. பள்ளியறை:—மனைவி உள்ளே வந்து கௌரங்கரின் ஜோதிகண்டு பிரமித்தல். தாயார் வரல். எவனோ ஒரு சுந்தராங்கன் என்னிடம் வந்துபோனான் என்று கௌரங்கர் கூறல்.

20. கௌரங்கர் பள்ளிக்கூடம் வைத்தல். பள்ளிக்கூடம் முற்றிலும் ஹரி ஹரி என்று கோஷ்டம். வேறுபாடம் ஏதும் நடப்பதில்லை.

21. மறுபடியும் கௌரங்கரிடம் திவ்ய ஜோதி தோன்றுகிறது. திருமஞ்சனமாட்டுக என்கிறார். அந்த சமயம் ஆறு கரங்களுடன் சேவை சாதிக்

---

உன்னைச் சுற்றியிருப்பது மந்தமாருதத்தை வீசும் பசுஞ்சோலையாயினும் உன் மனம் நிம்மதியா யில்லாவிடின் அச்சோலையின்காட்சி இன்பத்தைத் தராது.

கிறார், பிறகு அந்தத் தோற்றம் மறைதல். பழய உருவாதல். போய்வருகிறேன் என்றுசொல்லி மூர்ச்சை. உடனே ஜோதியும் மறைதல். அதன்பின் பஜனை கோஷ்டி நடக்கிறது.

22. ஒரு முஸல்மான் கௌரங்கரிடம் பக்தியாகி ஹரிதாஸர் என்ற பெயருடன் ஹிந்துவாக, அவரை நவாப்பின் சேவகர்கள் இட்டுச்சென்று கட்டி அடிக்க, அவர் உபாதையில்லாதிருக்க, கடைசியில் பக்தியுடன் மூர்ச்சையாக, அவரை இறந்தாரென்று ஆற்றில் எறிய, அவர் நீந்திக் கரைசேர்ந்து கௌரங்கரிடம் வர, நவாப் இதையறிந்து மன்னிப்பு கோருகிறார்.

23. ஸ்வாமிகளது வீட்டின் பக்கம் செல்வோரெல்லாம் ஹரி ஹரி யென்று மூர்ச்சையாய் விழுந்து பிறகு எழுந்திருந்து பரவசராகின்றனர்.

24. நவாபின் தர்பார்:—கௌரங்கர் இரவெல்லாம் பஜனைசெய்து நித்திரைக்குக் கெடுதிசெய்வதாய்த் தெரிவித்தல், பஜனையை நிறுத்த நவாப் உத்திர விடுகிறார்.

25. பஜனை நின்றுபோகவே, கௌரங்கர் இன்றிரவு கீர்த்தன கோஷ்டியுடன் நவாப்பைக் காணப்போவோம்; நீங்கள் தீவர்த்திகளுடன் வந்து சேருங்கள் என்று தன் பக்கத்தில் இருந்தவர்களுக்குச் சொல்லுகிறார். இவ்விதம் கூறியது சிலரிடம்தான். ஆயினும், பிரமிக்கத்தக்கவாறாக நாற்றிசைகளிலிருந்தும் தீவட்டிகளோடும் ஏராளமான ஜனங்கள் கூடிவிடுகின்றனர்.

26. திரளான ஜனக்கூட்டம் தீவர்த்திகளுடன் ஆரவாரித்தல். கூட்டத்தைப் பல பஜனைகோஷ்டிகளாக வகுத்தல். நடுவில் ஸ்ரீ கௌரங்கர் தனது துணைவர்களுடன் விளங்கப் புறப்படுதல். பஜனை கோஷ்டியுடன் தீவட்டிகளோடும் நவாப்பிடம்போதல். ஊர்வலம் கண்கொள்ளாக் காட்சியாகின்றது.

27. நவாப் கூட்டத்தைப் பார்த்துவிட்டு என்னவென்று விசாரிக்க ஒவ்வொருவராய் அனுப்ப, சென்றவர்களெல்லாம் பஜனை கோஷ்டியுடன் கூடிக்கொள்தல், நவாப் தனித்து நிற்றல், கௌரங்கர் பஜனை கோஷ்டியுடன் வரல், நவாப்பை அழைத்துவர உத்திரவிடல், நவாப் ஓடிவந்து அவரை வணங்கல். நீ என் பஜனை கோஷ்டியை நிறுத்தினாய், அவரவர் மதத்துக்கு அவரவர் கடவுள் பெரிது என்று கோபித்தல், நவாப் மன்னிப்பு கேட்டுக்கொண்டு அது முதல் அவர் சிஷ்யனாகிறார்.

28. ஓரிடத்தில் ஒரு சிறு குழந்தை இறந்துபோக, அதற்காக அக் குழந்தையின் பெற்றோர் வருந்தல், கௌரங்கர் அங்குசென்று குழந்தையைத் தடவுதல், குழந்தை எழுந்திருத்தல், நீ எங்கு போகிறாய் எனல், நான் இப்பிறவியிலும் மேன்பட்ட வாழ்வுக்குப் போகிறேன் என்று சொல்லிக் கண்மூடிக் கொண்டது. ஸ்வாமிகளும் சமாதானம் சொல்லித் திரும்புகிறார்.

29. கௌரங்கர் தாம் துறவியாதற்குத் தாயாரின் அநுமதி வேண்டல், தர்க்கம், சோகம், அநுமதிபெறல், மனைவியின் வாதம், ஸ்வாமிகள் சமாதானம், புறப்பாடு, மனைவியின் ஏக்கம், சந்நியாசியாதல், ஸ்ரீகிருஷ்ணசைதன்ய ஸ்வாமி

---

உன்னை அல்பமாக மதிப்போரின் எதிரில் நீ தலைநிமிர்ந்து நில். அவ்விதமில்லாவிடில் உன்னை நசுக்கவே பார்ப்பர்.

என்று புதிய நாமம் பெறல், தாயார் வர வணங்கல், என் கண்ணே உன் அழகிய தலைமயிரை வாங்க நாவிதன் எப்படி மனம் துணிந்தான் என்று பிரலாபித்தல், பிறகு அன்னையிடமிருந்து ஸ்வாமிகள் விடைபெறுகின்றார்.

30. பிறகு ஜகந்நாதம் சேருகிறார். ஜகந்நாத கோபுர தரிசனம், ஜகந்நாதரின் கோயில் முற்றிலும் சேவகர்களால் பாரா கொடுக்கப்பட்டு நிற்க, ஸ்வாமிகள் திடீரென்று கோயிலுக்குள் ஓடி ஜெகந்நாதரைக் கட்டியணைத்து மூர்ச்சையாகிறார்.

31. ஜகந்நாதத்திலுள்ள மகா ஸம்ஸ்கிருதபண்டிதரான சார்வ பௌமருடன் தர்க்கம், ஒரு சுலோகத்துக்கு ஒன்பது உரை பண்டிதர் கூறல், அதன் பின் 18–அர்த்தங்கள் அதிகமாக அதிசயிக்கும்படி ஸ்வாமிகள் கூறவும் பண்டிதர் எழுந்து நமஸ்கரித்தல். அவருக்கு ஸ்வாமிகள் ஆறு கரம் தாங்கி சேவை சாதிக்கின்றார். பண்டிதரின் பரவச நடனம். முடிவில் பண்டிதர் பாமாலை பாடிப் போற்றுகிறார்.

32. ஸ்வாமிகளிடம் பக்தி மிகுந்த குஷ்டரோகி யொருவன் அவ்வரைக் கண்டு தூரவிலக, ஸ்வாமிகள் அவனிடம் சென்று அவனைத் தழுவிக்கொள்ள, உடனே குஷ்டரோகம் மறைந்து அவன் சுகதேகியாகிறான்.

33. சோரநந்தி என்ற கள்வர்தலைவனைச் சந்தித்தல், அவனைச் சுத்தனாக்கிப் பக்தனாக்கல். ஸ்வாமிகளுடன் அவன் புறப்பட்டு விடுகிறான்.

34. ஸ்வாமிகள் காசி சேர்தல், அங்குள்ள சரஸ்வதி பண்டிதரை வெல்லுதல். பண்டிதர் ஸ்வாமிகளின் அடியாராகிறார்.

35. ஸ்வாமிகள் முன்பு தமது தாய்க்குக் கொடுத்த வாக்குப்படி நவத்வீபம் வரல். தாயாரின் அடி பணிதல், முக்காடுடன் மனைவி வந்து ஞாபகப் பொருளாய் ஒன்று கேட்க, தம் பாதரக்ஷையைக் கொடுத்தருளல். அது இப்போதும் வணங்கப்பட்டு வருகிறது.

36. ஸ்வாமிகள் நவத்வீபத்திலிருந்து புறப்பாடு, ஜகந்நாதம் போகும் வழியில் புலிகள் யானைகள் கிருஷ்ண நாமம் சொன்ன மாத்திரத்தில் பரவசமாகின்றன.

37. ஸ்வாமிகள் ஜகந்நாதம் சேருகிறார். அச்சமயம் ஜகந்நாதரின் ரதோத்ஸவம் நடக்கிறது. தேர் இழுக்கவராமற்போக, ஸ்வாமிகள் பக்தி மிகுந்து தம் சிரசால் ரதத்தை வணங்கவும் தேர் ஓடத் தொடங்குகின்றது.

38. சங்கீர்த்தன கோஷ்டி நடந்துகொண்டிருக்க, அதன் மத்தியில் வீற்றிருந்த ஸ்வாமிகள் திடீரென்று எழுந்து கண்ணனைக் கண்டேனே யென்று கடலை நோக்கிச் செல்லல்.

39. ஸ்வாமிகள் கடலின்மீது நடந்து செல்வதாய்ப் பாவனை காண்பித்து மறு நிமிஷத்தில் மறைதல். அந்தர்த்தானமாகிறார்.

40. ஸ்ரீ கண்ணனே கிருஷ்ணசைதன்ய ஸ்வாமிகளாக அவதரித்தனர் என்பது உண்மை. ஸ்ரீ சைதன்யர் தாமே பக்தனாகவும், பகவானாகவும் விளங்கி, பக்தி யொன்றினாலேயே உய்யும் வழியை யுணர்த்தி உலகை வாழ்வித்தருளினார். இன்றைக்கும் ஸ்வாமிகளின் அவதார ஸ்தலத்திற்கு ஏராளமான ஜனங்கள் யாத்திரை சென்று வருகின்றனர்.

ஸம்பூர்ணம்.




## பெண்மணிகள் விலைபடும் மிருகங்களா?

உண்மையைச் சொல்லுகிறேன். என் கணவரிடத்தில் எனக்கு அளவு கடந்த பிரீதி. ஆயினும் அவரிடமிருந்து அவ்வளவு பிரீதியை எதிர்பார்ப்பதற்கில்லை. என் உயிரைக் கையால் பிடித்துக்கொண்டே வீட்டு வேலைகளை விரைவில் செய்து முடித்து ஒரு நாள் புத்தகத்தை எடுத்தேன். என் கணவர் ஓடிவந்து புத்தகத்தைப் பிடுங்கி எறிந்து கன்னத்தில் ஓங்கி அறைந்தார். நான் பிரக்ஞை தவறினேன். பல நிமிடங்கள் பொறுத்து விழித்தேன். "கள்ளி! பாசாங்கு செய்கிறாயே—ஒழிந்து விடுவதானால் உடனே ஒழிந்து போகிறதுதானே" என்று திரும்பவும் ஓங்கி அறைந்தார். ஐயோ என்று கதறினேன். துன்புறுத்த வேண்டாம் என்று காலைப் பிடித்தேன். உதறித் தள்ளினார். பொத்தென்று விழுந்தேன். திரும்பவும் உலக அறிவை இழந்தேன். கண் விழித்துப் பார்க்கும் போது, ருத்ராமூர்த்தியாக என் கணவர் என்முன் நின்றுகொண்டிருந்தார் நான் நடுங்கி அலறினேன். "ஏ பெண்ணே—நீ ஆறுமாதத்தில் இறந்துவிடுவாய் என்று உன் ஜாதகம் சொல்கிறது—என் வார்த்தைக்குக் கீழ்படியாத நீ அவ்வளவு காள் உயிருடன் இருந்தென்ன?—மாயக்கள்ளி, பைசாசமே—எழுந்து சென்று வீட்டு வேலையைச் செய்கிறாயா இல்லையா" என்றார். நான் என் உடம்பில் சக்தி இல்லையென்றும், ஆறு மாதத்தில் போகும் என்னை ஆறு நாட்களாவது அன்புடன் நடத்தலாகாதா? என்றும் மன்றாடினேன். "எதிர்த்துப் பேசுகிறாயா?—உன்னை என்ன செய்கிறேன் பார்" என்று கர்ஜித்தார். நான் உடல் நடுங்கி, என் பலத்தையெல்லாம் சேர்த்துக் கூட்டிக்கொண்டு எழுந்து தண்ணீர் மெள்ளக் கிணற்றருகிற் சென்றேன்.

ஃ

காக்கை எருதின் நோயை உணருமா? ஆடவர்கள் பெண்களாகிய நம்மை ஏதோ விலைக்கு வாங்கிய வஸ்து என்று, அடிமையிலும் அடிமையாக நடத்துவது இக்காலத்திலும் இருப்பது ஆச்சரியத்தையே உண்டு பண்ணுகிறது. கலாவதிகளே! நம் அழகும், படிப்பும், குணமும் நாம் கன்னியர்களாகத் தாய் வீட்டில் இருக்கும் பரியந்தமே நமக்கு உரிமை. விவாக உலகத்திற் சென்றதும் கேவலம் மிருகங்களைவிடத் தாழ்ந்தவரேயாகிறோம். கடவுள் நமக்கு விதித்த விதிதான் என்னே?

ஓர் நங்கை.

ஃ

[பெண்களுக்கு அதிக ஸ்வதந்திரம் கிடைத்துவிட்டதென்று ஓயாமற் பேசப்படுகிறது. பெண்களும் ஓட்டுரிமை பெறக்கூடியவர்களானார்களென்றும், சட்டசபை நகரசபைகளில் வீற்றிருக்கும் உயர்வினை எற்றுள்ளார்களென்றும், எங்கும் பெரும் முழக்கமாயுள்ளது. பெண்களின் முன்னேற்றம் என்று எவ்வளவோ சொற்பொழிவுகளை நிகழ்த்துகின்றார்கள். அவை யாவும் வெளியில் செய்யப்படும் ஆரவாரமாய்க் கிடக்க, உள்ளுக்குத் திரை மறைவிலோ மிருகங்களினுங் கேடாக ஸ்திரீகள் நடத்தப் படுகின்றனர். கொடிய கணவர்களிடை சிக்கிக் கண்ணீரும் கம்பலையுமாய்க் கதறும் காரிகைமார்க்கு அளவு எது? ஒரு ஆடவனுக்கு மற்றோர் பெண்ணின்மீது நாட்டம் சென்றுவிடினோ தன்னை நம்பிய மனைவியை அடியோடும் வெறுக்கின்றான். அவள் விரைவிற் சாகாளா என்று தினமும் எதிர்நோக்குகின்றான். தான் இச்சித்த நங்கையை மறுதாரமாக மணக்கவும் துணிகிறான். அவனுக்குப் பெண் தரவும் சில மூடப் பைசாசங்கள் காத்திருக்கின்றன. அவ்விதமே அவனுக்கு வேறு விவாகம் நடந்துவிடில், அவனை நம்பிய பெண்ணின் கதி என்ன? அவன் விவாகம் செய்து கொள்ள ஸ்வதந்திர மிருக்கிறது, சாஸ்திர சம்மதமு மிருக்கிறதாம்; ஆனல், இப் பெண்கொடி என் செய்வது? உத்தமக் கற்புடைய வனிதை மறுமணம் மணக்க சட்டமே யிருப்பினுங்கூட அதற்கு இசையாள். அதைவிடத் தன் ஆவி போவது மேலெனக் கருதுவாள். பின் இதற்கு முடிவுதானென்னையோ? நமது பெண் குழந்தைகள் கல்வி கற்கவேண்டுமென்று எவ்வளவோ ஆசைப்படுகின்றோம். செவ்வனே படிக்கவும் வைக்கின்றோம். நன்கு கற்றோனையே தேடி அவனுக்கு விவாகம் செய்துகொடுக்கிறோம். இவ்வளவு வரையில்தான் நாம் நமது மானுஷீக சக்தியில் செய்யலாம். அதன் பின்னர் நமது பெண்ணின் கணவன் கற்றோனுயிருந்தும் கற்றறி மூடனாகி மனமும் மாறி நம் பெண் கையிலிருக்கிற புஸ்தகத்தைப் பிடுங்கி அடுப்பில் எறிந்து ஆரவாரிப்பானுயின்—அப்போது நாம் செய்யக் கூடியதென்ன? அவனோடு சண்டையிட்டு மனஸ்தாபப்படலாம். அவ்வளவே தவிர, நமது பெண் எத்தனைச் சிறுமைகள் பட்டாலும் அவனிடமே யிருந்துதான் வாழவேண்டி வருகிறது. நாம் மருமகனிடம் கோபித்து நமது பெண்ணை யழைத்துக் கொண்டுவந்து என்ன செய்கிறது? சில மாதங்கள் கழிந்தேனும் மறுபடியும் அவனிடமே தான் அனுப்ப வேண்டியதாகிறது. ஹா! எத்துணை மனோவேதனையிது! இன்னும், நன்கு படிக்கவைத்த நமது குமாரத்தியைப் படிப்பறியாதவனுக்கோ, படித்திருந்தும் வாசிப்பின் ருசிகாத்தை யுணராதவனுக்கோ கொடுத்துத் தொலைப்பதில்—அந்தப்பெண் வருந்தி கற்றக் கல்வியெல்லாம் விருத்திக்கிடமின்றி வீணேயாகின்றது. இவற்றையெல்லாம் நோக்கில் பெண் குழந்தைகளைப் பெறுதிருந்தால் மேலென்று தோன்றுகிறது. ஆனல், அது நமது இஷ்டப்படி நடக்கும் காரியமா? பகவானே பெண்குழந்தைகளைத் தான் அதிகமாகக் கொடுத்துச் சோதிக்கிறார். ஆண்குழந்தையைவிடப் பெண் குழந்தை மிக்க அழகுதான். ஆனல், பிறகு அது படுங்கஷ்டங்களைப் பார்க்க மனது தான முடியவில்லையே தேவா!—ப—ர்.]

---

தான் மோசக்காரப் புள்ளியாயினும் தன் நண்பன் சத்தியவந்தனென்று நினைப்போரும் சிலர் உண்டு.

# சிறுமணித்திரள்

(208-ம் பக்கத் தொடர்ச்சி.)

1006. ரகசியத்தில் ஒருவனுடன் கூடிப் பலமுறை சுகித்துவிட்டு, அவனுக்குத் தன் கற்பைத்தாரை வார்த்துவிட்ட பிறகு, அவன் ஏழையென்று எண்ணி அவனை ஒதுக்கி, வேறோர் இடத்தில் மற்றொருவனைப் புதுப் பெண்போல் மணம் செய்துகொண்டு வாழும் பெண்கள் எத்தனைபேர்?

1007. முகத்தைச் சுளித்துக் கொள்ளுதல், கோணுதல், கோபித்தல், அன்னம் வேண்டாம்—அது வேண்டாம்—இது வேண்டாம் எனல், மூர்க்கம் பிடித்தல், வாதிடல், எதிர்த்தல், வீசி எறிதல், அழுதல், ஆரவாரித்தல் யாவும் தன்னைத் தாங்குவோர் அருகில் இருக்கும்போது தான். அவர்கள் இல்லாத இடத்தில் எந்தக் குட்டிச்சுவரிடத்தில் போய் முகத்தைக் கோணுவது, கோபிப்பது?

1008. உப்பில்லை, புளியில்லை, காரம் போதாது என்று பிறர்சமைத்தபோது குற்றம் பேசித் துடிக்கலாமேயன்றித் தானே சமைக்கும்போது எவரிடம் தன் கோபத்தைக் காண்பிப்பது?

1009. குழந்தைகளைப் பேச்சில் வெல்வதற்கு சாத்தியமில்லை. ஏமாற்றவும் முடியாது. ஆனால், ஏமாறிப் போகிறவர்கள் அவர்கள்தான்.

1010. ஒவ்வொரு பெண்மணியிடமும் ஒவ்வொருவித அழகும், ஒவ்வொருவித வசீகர பாவனையும் நடைகொடிகளுமாக இருப்பதால், ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவித சுவை தோற்றுவித்து ஒவ்வொருவித புது அநுபவத்தை, ரம்மியத்தை, ஊட்டுவிக்கின்றது.

1011. யுவக யுவதிகள் பரஸ்பரம் விரும்பித் தேடுவது, தங்களின் மறு பாதியாயுள்ள ஜீவ மாணிக்கங்களையே.

1012. பந்துக்கள் வியாதியஸ்தனைப் பார்க்க வருவது எதற்காக? அவனுக்குத் துணையிருந்து உதவி செய்யவா? இல்லை யில்லை; தாங்களும் வந்திருந்தோமென்று ஒரு கணக்கு ஒப்புவிப்பதற்காகவேதான்.

1013. இந்த உலகத்தில் ஒரு மனிதனுக்கு எத்தனை பேர்கள் நெருங்கியிருந்தாலுங்கூட, தன் பிராணன் போகிற சமயத்தில் தன் பக்கத்திலிருந்து பால் ஊற்றிக் காத்திருக்க ஒருவராவது கிடைத்தால் அது பெரும் பாக்கியமே.

1014. மாணம் என்பது எவரோ ஒரு சிலர் விரும்புவது; எனினும் அது பலர்க்கு இடர் தீர்ப்பது. அனைவர்க்கும் கடைசியில் நிச்சயமாக நேர்வது!

1015. சன்யாசி தான் ஈன்ற மக்கட் பாசத்தை விட்டாலும் விடலாம். ஆனால் வளர்ப்பு மக்களைத் தான் ஈன்றவர்களிலும் அதிகமாக நேசிப்பதால், அந்தப் பிரிவுத்துயரம் எவ்விதமும் நெஞ்சில் தைக்கவே செய்யும்.

---

சிலரிடம் அதிக தினங்கள் தங்கினாலும், அளவுக்கு மீறி நெருங்கினாலும் ஏதேனும் மனஸ்தாபமோ சண்டையோ உண்டாகிவிடுகிறது. மரியாதையும் கெடுகிறது. அற்பமாகவும் எண்ணிவிடுகிறார்கள்.

1016. ஆளும் அரசனும், ஆளப்படும் ஜனங்களும் ஒரு மதத்தை யநுஸரிப்பவர்களா யிருந்தால், அவர்களின் ஆநந்தப் பெருக்கை அளவிடவும் கூடுமோ? அதுவே பாதி சுயராஜ்யம் வந்தது போலாம்.

1017. விவாகம் — இறைவனால் அருளப்பட்ட ஒரு அரிய வரன்; உலகில் மாநுட கோடிகள் ஐக்கியமாய் வாழ்வதற்கென்று ஏற்பட்ட ஒரு கோட்பாடு.

1018. படித்தவனுக்குப் படித்த பெண்ணையும், படிக்காதவனுக்குப் படியாத பாவையையும் பாணிக்கிரகணம் செய்வதாயின், அதுவே பத்து விதப் பொருத்தங்களிலும் மேலான தான பொருத்தமாம்.

1019. பெண்கள் மனம் வைத்து விட்டால் எந்தக் காரியம்தான் நடவாது. நாம் மதிகொண்டு வேலை செய்தால், அவர்களோ மந்திரங் கொண்டு வேலை செய்வது போல் செய்து முடிப்பார்கள். மந்திரத்தாலும் ஆகாத காரியங்களைத் தங்களின் மயக்குகையைக் கொண்டு பூர்த்தி படுத்திக்கொள்வார்கள்.

1020. தன் பர்த்தாவை உயிராகவும், தன்னை உடலாகவும், அவரைப் பரமாத்மாவாகவும், தன்னை ஜீவாத்மாவாகவும் கொண்டு வேறு எப்பொருளுக்கும் அவரை விரும்பாமல், அவருக்காகவே அவரை விரும்பி, அவரையே பிராணதாரமாகவும் எல்லாமு மாகவும் நம்பி, அவருக்குக்காகவே உயிர் வாழ நினைப்பதுதான் உத்தமமாகும்.

1021. பிறரை ஏமாற்றிப் பிழைத்து முன்னுக்கு வந்தோர் பிற்காலத்தில் கோடீஸ்வரர்களானபோதிலுங்கூடத் தங்களின் பழைய குணங்களை விடாமல், அன்னோர்தம் ஜீவிய முற்றும் மற்றவரை ஏமாற்றி மோசம் செய்வதிலேயே காலம் கழிப்பர்.

1022. பெண்ணின் அழகு கணவன் பார்த்துக் களிக்காதவரைக்கும் என்ன பயனுடைத்து?

1023. செல்வம் பிரிந்து தொலைந்தகாலத்துங்கூட கற்பரசியான வீட்டின் செல்வி தன் நாயகனையே தனது மங்களத் திரவியமாக ஏற்று மகிழ் பூத்து மரியாதைசெய்து அணைப்பாள்.

1024. ஒருவன் எவ்வளவு ஏழ்மையான நிலையில் இருக்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு நலம். அந்தஸ்து உயர உயர சங்கடங்களும் மனவருத்தங்களுமே அதிகமாகிறது.

1025. பெண்கள் சிறிது அன்பாகப் பேசிவிட்டால் அவர்கள் தமக்கு வசப்பட்டு விடுவார்களென்று மூடப் புருடவுலகம் நினைக்கிறதாக்கும்.

1026. உன்கடிதத்தை எவ்வளவு சுருக்கமாக எழுதமுடியுமோ—அவ்வளவு சுருக்கமாக எழுதினால்தான் உனக்குப் பயம் கிடையாது.

1027 என்னதான் உனக்கு ஒருவர்மேல் பகை யேற்படினும் நீ அவருக்கு எழுதும் கடிதத்தில் கோபமாகவும், திட்டியும் எழுதாதே.

1028. எவ்வளவு காலம் வரையில் நம்மைப் பெற்றவர்கள் நம்மை விட்டுப் பிரியாமல் இருக்கமுடியும்? அவர்கள் நம்முடன் இருக்குமளவும் நமது தேகத்தைப்பற்றிய கவலையே நமக்கு இல்லை.

1029. தனவான்களுடைய பெண்ணானால் உடனே தக்கவரன் கிடைக்கும். எவ்வளவு கருப்பாய் கோணலாய் இருந்தாலென்ன? இரண்டாயிரம் ரூபாய் நகைகளும், இருநூற்றைம்பது ரூபாய் சேலையும் மேலே ஏறும்போது கருப்பும் சிவப்பாகிக் கோணலும் நேராகி விடுமல்லவா?

P. G. குலசேகரன்,
"மனோரஞ்சினி விலாஸ்"




# வித்துவானை வென்ற விகடகவி.

1. சுவர்ணவதி என்ற நகரத்தில் வீரசேனன் என்று ஒரு அரசன் இருந்தான். அவனிடம் சமஸ்தான வித்வானாக இருந்தவனின் பெயர் கங்காதா சாஸ்திரி இந்த சாஸ்திரி தனது கல்வித்திறமையைக் காட்டுவதற்காகப் பற்பல தேசங்களுக்குப்போய், அங்குள்ள அரசர்களின் சமஸ்தான வித்வான்களோடு தர்க்கம் செய்து அவர்களை ஜெயித்து ஏராளமான திரவியத்துடன் தனது ஊருக்குத் திரும்புவது வழக்கம்.

2. ஒரு சமயம் கங்காதா சாஸ்திரி கல்யாணபுரத்து அரசனான நரசிங்க வர்மனுக்குத் தான் தர்க்கம்செய்ய வரப்போவதாய்க் கடிதம் அனுப்பினான். அது நரசிங்கவர்மனுக்கு அதிக துக்கத்தைக் கொடுத்தது. தன்னுடைய சமஸ்தான வித்வான் மஹாலிங்க சாஸ்திரி ஒருவேளை தோற்றுவிட்டால் மிகுந்த அவமானமாயிற்றே என்று விசாரப்படலானான்.

3. அரசன் இப்படி விசனிப்பதைக் கண்ட அவனுடைய விகடகவி தான் கங்காதா சாஸ்திரியை ஒரு நிமிஷத்தில் ஜெயித்து விடுவதாயும், தன்னிடம் முதலில் அனுப்பும்படியும் கூறினான். அரசன் நகைத்து, கங்காதா சாஸ்திரிககு நீ எந்த மூலை; உன்னால் என்ன ஆகும் என்றான். எல்லாம் கடைசியில் தெரியும்— நான் தான் நிச்சயமாக ஜெயிப்பேன் என்று விகடகவி சொன்னான். அரசனும் விகடகவியின் பிரியப்படிச் செய்ய சம்மதித்தான்.

4. கங்காதா சாஸ்திரியும் பல்லக்கில் வந்து சேர்ந்தான். அரசன் வெகு மரியாதையுடன் அழைத்துச்சென்று விகடகவியின் முன்புவிட்டு, அவருடன் தர்க்கம் செய்யும்படி கூறினான். விகடகவியோ ஒரு பொற்பீடத்தின்மேல் உருத்திராக்ஷமாலை நிறைந்த கழுத்தோடும், திருநீறு நிறைந்த மேனியோடும் மௌன சாமியார்போல் ஒன்றும் பேசாமல் கம்பீரமாக உட்கார்ந்துகொண்டிருந்தான்.

5. கங்காதா சாஸ்திரி விகடகவியிடம் நெடுநேரம் காத்திருந்தும் பேசாமையால், அவன் மௌனவிரத முடையவனென்று எண்ணி, அடையாளங்களாலேயே தர்க்கம் செய்ய நினைத்து, ஒரு விரலைக் காட்டினான். அதை கண்ட விகடகவி இருவிரலைக் காட்டினான். கங்காதா சாஸ்திரி மூன்றுவிரலைக்

---

தங்கள் வீட்டுக்கு வந்துள்ள விருந்தினரிடம் கடன் கேட்டுப் பெறுவது சிலரது வழக்கம். விருந்தினரும் தங்களை அவ்வீட்டினர் உபசரித்ததில் ஏற்பட்ட செலவுகளுக்குக் கணக்கு பார்க்காமல், தாங்கள் மூக்குப் பொடிக்காகக் கொடுத்த காலணாவுக்குமட்டும் கருத்தாய்க் கணக்குவைத்து அதை மறவாமல் திரும்பப் பெற்றுக்கொண்டு ஊருக்குப் புறப்படுவர்.

காட்டினுன். விகடகவி அதற்குப் பதிலாக நான்கு விரலைக்காட்டினுன். சாஸ்திரி ஐந்துவிரலேயும் காட்டினுன். விகடகவி கைவிரல்களை மடித்து இடிப்பது போலக் காட்டினுன்.

6. இதைப்பார்த்த கங்காதரசாஸ்திரி அதிக விசனத்துடன் அரசனிடம் வந்து, "மஹாராஜனே! நான் உங்கள் வித்வானிடம் தோல்வியடைந்தேன், என் பொருள்களையெல்லாம் உம்மிடம் கொடுத்துவிடுகிறேன்" என்று வணங்கிச் சொன்னுன். அதைக்கேட்ட அரசன் ஆநந்தமடைந்து எனது வித்வான் எப்படி உம்மை ஜெயித்தார், அதைச் சொல்லவேண்டுமென்றுன்.

7. அதற்குக் கங்காதரசாஸ்திரி, "மஹாராஜனே! உங்கள் வித்வான் என்னுடன் ஒன்றும் பேசாதிருந்ததாலும், நான் பாஷையினுலே கேட்ட வினுக்களுக்கு அடையாளத்தாலே விடை சொன்னபடியாலும், அவர் மௌனவிரதமுடையவரென்று தெரிந்துகொண்டேன். ஆதலால், அடையாளத்தாலேயே பேசும்படி எண்ணி, ''சகல லோக கர்த்தர் ஒருவரே'' யென்று நான் ஒரு விரலைக் காட்டினேன். அப்போது அவர் "சத்தி, சிவம்" என்று இருவர் என இருவிரலைக் காட்டினுர். அப்படியல்ல; "பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் எனக் கடவுளர் மூவர்" என்று மூன்று விரலைக்காட்டினேன். அப்போது அவர், அப்படியல்ல; "பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசுரன் எனக் கடவுள் நால்வரென்று" நாலுவிரலைக் காட்டினுர். நான் பின்பு, கடவுளர் "பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என ஐவர்" என்று ஐந்து விரலேயுங் காட்டினேன். அப்போது அவர் கைவிரல்களை மடித்து ஒரு அடையாளங் காட்டினுர். அதனுடைய அர்த்தம் எனக்குப் புலப்படவில்லை. ஆதலால் நான் தோல்வியடைந்தேன் என்று கூறினுன். பிறகு கங்காதர சாஸ்திரி அரசனிடம் விடைபெற்று, முகம் வாட, கைநடுங்க, மேனியெல்லாம் வியர்வை தோன்ற, மனது பதைக்க, பல்லக்கு வெறுமையாய் ஒருவழியே போக, சாமரங்கள் ஒரு வழியே போக, ஏவலாளர்கள் ஒருவழியே போக, அவமானம் என்னும் காற்று தள்ள, சீக்கிரத்திலேயே தனது ஊருக்குப் போக நாணிப் புறப்பட்டுச் சென்றுன்.

8. கங்காதர சாஸ்திரி ஓடிப்போகவே, அரசன் அளவில்லாத சந்தோஷத்தோடு விகடகவியிடம் வந்து, அவனைக் கட்டித்தழுவி, "விகட கவீசுரா! உன்னிடத்திலுள்ள சாமர்த்தியம் இந்த உலகத்திலே யாருக்குண்டு? கணக்கில்லாத தேசங்களுக்கெல்லாம் போய், அவ்விடங்களிலுள்ள பண்டிதர்களை யெல்லாம் வென்று, வெற்றிச் சங்கம் முழக்கி, வெற்றிக்கொடி நாட்டிவந்த கங்காதர சாஸ்திரியை நீ எப்படி ஜெயித்தாய்? எங்களுக்கு அந்த உபாயத்தைச் சொல்" என்று கேட்டான்.

9. அதற்கு விகடகவி சொன்னதாவது:—என் அரசே! கங்காதர சாஸ்திரி என் முன்புவந்து உட்கார்ந்தபோது, நான் அவனைக் கண்டு எழுந்து மரி

---

தன் ஊரைவிட்டு வெளியூரில் அடிக்கடி திரிந்து பழகிப்போன மனிதன் எந்தக் கஷ்டத்தையும் தாங்ககூடியவனு யிருப்பான். பலகாரம் கிடைத்த இடத்தில் அதையும் உண்பான். பழைய சோறு கிடைத்த இடத்தில் அதையும் அன்பாய் ஏற்பான். எவ்விதமேனும் தன் வயிற்றைச் சரிசெய்துகொண்டு தான் வந்த காரியத்தில் கவனமாக இருப்பான்.

யாதை செய்யாமலும், ஒன்றும் பேசாமலும் இருந்தேன். அப்போது அவன் மிகு கோபங்கொண்டு, "என்னை நீ அறிவாயா?" என்னும் பொருள் பயக்க ஒரு விரலைக் காட்டினான்; நான் "உன்னை இருமுறையும் அறிவேன்" என்பதாக இரண்டு விரலைக் காட்டினேன்; அப்போது அவன், "உன்னை மூன்று தலைச் சூலத்தால் குத்துவேன்" என்பதாக மூன்று விரலைக் காட்டினான். அப்போது நானும் கோபித்து, "நான் உன்னை நாலுதலைச் சூலத்தாலே குத்துவேன்" என்பதாக நாலுவிரலைக் காட்டினேன்; அவன் அப்போது, "உன்னை அடிப்பேன்" என்று ஐந்துவிரலைக் காட்டினான்; நான் "அப்படியானால் உன்னை இடிப்பேன்" என்று ஐந்துவிரலை மடித்து முட்டிக்குறி காட்டினேன்; அது கண்டு அவன் பயந்து, மயங்கித் தியங்கி ஓட்டம்பிடித்தான் என்றான்.

10. விகடகவி கூறியதைக்கேட்டு அரசன் சந்தோஷமடைந்து, தந்திரப் பிரயோகத்தினாலேயே எவரையும் வெல்லலாம் என்று நினைத்து, அவனுக்குத் தகுந்த ஸன்மானம் செய்தான். இக்கதையினால் நாம் அறிவதென்ன? உபயோகமற்றவனுங்கூட ஒரு சமயத்திற்கு உதவுவான் என்பதே. உலகத்தில் உபயோகப்படாதவர்கள் ஒருவருமில்லை. அவ்விதமே எந்தப் புஸ்தகமும் உபயோகப்படத் தக்கதே. எந்தப் படிப்பும் பயன்படக்கூடியதுதான். அது ஒவ்வொரு காலத்துக்கு வேண்டியிருந்து அப்போது அதன் அருமை புலப்படும்.

11. இருவரும் கையாலேயே அடையாளம் காண்பித்துக்கொண்டு பேசியதில் கங்காதர சாஸ்திரி நினைத்தது ஒருவித அர்த்தம்; அதற்கே விகடகவி எண்ணியது வேறொரு அர்த்தம். இவ்விதமே அவரவர்களின் புத்தி விசாலத்துக்குத் தகுந்தபடி ஓரே விஷயத்தை வெவ்வேறு விதமாகக் கிரகிப்பார்கள்.

## நினைத்தபடி நெஞ்சு.

ஒன்றைப் பரிசுத்தமென நினைத்துவிட்டால், அது அசிங்கதமாயிருப்பினும் பரிசுத்தமாகவே தோன்றும். அது மனதைக் கறைப்படுத்தாது. ஒருவன் ஒரு சோடா புட்டியைக் குடித்தான பிறகு அதின் அடியில் ஈ ஒன்று செத்துக்கிடப்பதைப் பார்க்கிறான். எனினும், தன் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு அது தனக்குக் கெடுதி செய்யாது என்று நம்பிவிடும்படி நெஞ்சை வற்புறுத்திவிடுகிறான். அவ்விஷயத்தையே மறந்துவிட முயன்று மறந்தும் விடுகிறான். அவனது நெஞ்சின் உறுதியால் அவனுக்கு வாந்தி எதுவும் உண்டாகாமலே சாதாரணமாய்ப் போய்விடுகிறது. இவ்விதமே, ஒரு மனிதனைப்பற்றிப் பெரிய மோசக்காரனென்று சந்தேகிக்காதவரையில் நெஞ்சில் எவ்விதக் கவலையும் தோன்றுவதில்லை.

# ஜீவன் அணியும் சட்டைகள்.



ஜீவன் பரமாத்மாவின் அணுவென்றும், அச் சிவனுக்கு ஸ்தூலதேகம், லிங்கதேக முதலிய ஏழு தேகங்களுண்டென்றும், இத் தேகங்கள் ஏழும் ஏழு சட்டைகளைப் போன்றதென்றும், ஜீவன் இறந்ததென்றால் ஜீவனின் முதற் சட்டையாகிய ஸ்தூலதேகம் நீங்கியதென்றும், பிறகு லிங்க சரீரமென்னும் இரண்டாம் சட்டையோடு ஜீவன் சிறிது காலம் புவர் லோகத்தில் சஞ்சரிக்கிறதென்றும், அப்பால் மனோ தேகத்தோடு சுவர்க்கத்தில் நெடுங்காலம் சுகிக்கிறதென்றும், பின்னர் வேறு சட்டையாகிய ஸ்தூல தேகத்தோடு பூலோகத்திற்குத் திரும்பி வருகிறதென்றும், இவ்வாறு முதன் மூன்று சட்டைகளைத் தரித்தும், போக்கியும், ஜீவன் மாறிமாறித் தோன்றும் இயல்புடையதென்றும், அறிஞர் கூறுகின்றனர். இதையே நாம் பிறப்பும், இறப்பும் என்கின்றோம். இவ்வுண்மையை அறியாது நாம் பிறக்கையில் சந்தோஷிப்பதும், இறக்கையில் துக்கிப்பதுமாயுள்ளோம். ஆயினும், நாம் ஊன்றிப் பார்த்தால் நாம் பிறக்கையில் அழவும், இறக்கையில் ஆனந்திப்பதும் நியாயமாகும். ஏனெனில், ஜீவன் முதற் சட்டையாகிய ஸ்தூலதேகத்திலிருக்கும்போது, காவற் கூடத்திலுள்ள கைதிக் கொப்பாகும். ஆயினும், இவ்வித உண்மையை உண்மை ஞானிகள் அறிவதன்றி, மனத்தின் வயப்பட்டு உலக சுகமே உயர்ந்ததென்றெண்ணும் நம்மவர் அறிவது கூடுமோ? வார்த்தையளவே மகிழலாமன்றி மற்றில்லை. ஆகவே, நாம் மகான்களின் உயர்ந்த நிலைமைக்கு நம்மை உயர்த்திக் கொண்டாலொழிய நாம் இதைப்பற்றி அதிகம் பேசுவதும், தர்க்கிப்பதும் வீண் ஆகும்.

ஃ

ஜீவன் முதற் சட்டையை விட்டு இரண்டாம் சட்டையிலிருக்கும் காலம் மனிதன் இறந்த நாள் முதல் கருமாதி நாள் வரையிலுள்ள காலமாகும். இவ்விரண்டாம் சட்டை நூலாற் செய்த சட்டையன்று; எலும்பு, தோல், நரம்பு முதலியவற்றாலான சட்டையுமன்று; ஆசையாலானதாகும். இவ்வாசை மனிதர்க்கு எவ்வளவுண்டோ அவ்வளவு அச் சட்டை தடித்தும், உறுதியாயுமிருக்கும். இச்சட்டையிலிருக்கும்போது ஜீவனுக்குக் கஷ்டமேயாம். இச் சட்டை நீங்கி அப்பால் மனோ சட்டையில் மனோ லோகத்திலிருப்பதே ஜீவனுக்குச் சுகமாகும். இக்காரணத்தால், இரண்டாம் சட்டையிலுள்ள காலத்தை ஜீவனின் உறவினரும், நண்பரும், நல்லெண்ணத்தாலும், பிரார்த்தனையாலும் கழித்து அவ்வாசைச் சட்டையை அறுக்க முயலவேண்டும். மனிதன் இறந்தபின் 16-நாளும் நாம் அந்தணரைக் கொண்டு சொல்லும் மந்திரமும், செய்யும் கருமங்களும் இவ்வெண்ணத்தை நிறைவேற்றுவ

---

சிலர் தாங்கள் அவனுக்கு ஒரு வஸ்துவைக் கொடுத்திருப்பதாகப் பெருமையடைகிறார்கள். அதைப் பெற்றவனோ அலக்ஷியத்துடன் ஒரு மூலையில் வீசி எறிகிறான். ஆனால், அதைத் தந்தோர் முன்பாக மட்டும் அதற்காக வெகு நன்றி தெரிவிப்பவன்போல் நடிக்கிறான்.

தற்காகும். நாம் நல்லெண்ணமுடையவராயின், நற் காரியங்கள் மிகுதியும் செய்தவராயின், கேவலம் மண்ணாசை, மனையாசையில் அறவே மூழ்கி அறிவு கெட்டவரல்லராயின் நமது ஆசைத் தேகமாகிய இரண்டாம் சட்டை அதிகநாள் நிற்பதில்லை. ஆகவே, நாம் பூவுலகில் உள்ள நாளும், நம்முடைய நன்மையின் பொருட்டே நமது எண்ணங்கள் உயர்ந்த எண்ணங்களாக ஆக்கவும், செய்கைகளை நற்செய்கைகளாக மாற்றவும் முயலுவது அவசியம்.

"பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே" என்றார் பட்டணத்தாரும்.

---

## இடையிலே கோணல்!

'முதல் கோணல் முற்றுங் கோணல்' என்பார். ஆனால் இடையில் வருகிற கோணலோ அதுவும் ஒரு பெருங் கஷ்டம்தான். ஒருவன் எவ்வளவு தூரமாயினும் நடந்து போவது சுலபமாக இருக்கும். ஆனால், தான் நடந்த வழியே மறுபடியும் திரும்பி வேறொரு பாதையில் செல்லவேண்டுமென்று இடையில் கோணல் ஏற்பட்டால், மறுபடியும் திரும்பி முன்பக்கம் நடப்பதற்கு அதிக கஷ்டமாயிருக்கும். அவ்விதமே ஒரு நூலை மடமடவென்று எழுதிக்கொண்டு போனபிறகு, அதற்கு முன்பாகத்தில் சில விஷயங்களை விட்டுவிட்டு எழுதியதாய்த் தெரிகிறபோது, மறுபடியும் ஆரம்பமுதல் கவனித்து வாசித்தறியும்படி ஏற்படுவதில் மிகுந்த கஷ்டப்படும்படியாகிறது. இவ்விதம் இடையில் கோணல் ஏற்பட்டபோது ஒரு பிரபல ஆசிரியர் பின் வருமாறு கூறினார்:—"இடையில விஷயத்தை விட்டுவிட்ட கோணலால், நேற்று மாலை எழுத்துப் பிரதியை முதலிலிருந்து 136-பக்கம்வரை கூர்மையாய்ப் படித்ததில் ஒருவித மயக்கமுண்டாகி காலையில் எழுந்திருக்கும்வரையில் அதைப் போலவே யிருந்தது. இன்று காலைமுதல் வெளித் தொந்தரவுகள். பலர் வந்து பசி நேரத்தை வீணாக்கினர். இன்னும் மயக்கம் தீரவில்லை. இப்போது படுக்கச் சென்று மத்தியானம் 3-மணிக்கு எழுந்து பார்த்து அப்போது மயக்கமில்லாமலிருந்தால மறுபடியும் படிக்கத் தொடங்கி இடையிலுண்டான கோணலைச் சரிசெய்ய உத்தேசம்"— என்றார். இடையில் எவ்விதமோ மறந்துவிட்ட கோணல் எவ்வளவு தொல்லைதருகிறது பாருங்கள்.

# தமிழிலே தெய்வீக அன்பு.



அன்பு அர்த்தமாவதற்கு உயர்ந்த வாழ்க்கை நிலைவேண்டும். உயர்நலஞ் சார்ந்த நிலையினின்றும் தமிழ் மொழியிலே தெய்வீக அன்புகொண்டு செய்யப்பெற்ற கவிதைகட்குக் கணக்கேயில்லை. பழந்தமிழனுடைய ரஸப் பாட்டுகளின் இன்பம் சொல்லொணாது. ஒவ்வொரு கவியும் தெய்வீக அன்பிலேயே தொடங்கப்பெறும். தமிழ்ச் சுவையை யுணர்வதற்குத் தமிழனாக மாறினால்தான் முடியும்.

ஃ

பாஷை என்பது சப்த பிரம்மன். கடவுள் இல்லாமல் மனிதன் இருக்க முடியாது; அவ்விதமே பாஷையில்லாமல் ஜனங்கள் உயிர்வாழமுடியாது. அரிசிச்சோறு தின்று பழகினவனுக்குக் கோதுமை ரொட்டி அத்தனை ருசிக்காது, ஜீரணமுமாகாது. ஒரு நாளைக்கு வேண்டுமானால் தின்பண்டமாய்ச் சாப்பிடலாம். ஆனால், உயிர் வாழ்வதற்கு அரிசிச்சாதம்போல் கோதுமை ரொட்டி ஒரு உணவுப் பொருளாகாது. பாஷை இரத்தத்திலிருக்கிறது. ஜர்மனிக்குப் போன தமிழன் நாளொன்றுக்கு இருபத்திநான்குமணி நேரம் ஜர்மன் பாஷை பேசினும்—"நீ எந்தத்தேசத்தானென்றால்"—"தமிழன்" என்று தான் சொல்லுவான். அந்தக் கட்டை விலகித் தள்ளுவது முடியாது. அயல் தேசத்துக்குப் போனால்தான் நம்முடைய பாஷையின் அருமை தெரியும்.

ஃ

பாஷை ஒரு ஜாதியாரைக் கட்டியிழுக்கும் ஒரு காந்தம். பாஷை உயர அந்த ஜாதியும் உயர்கின்றது. பாஷை தாழத்தாழ அந்த ஜாதியும் தாழ்ந்துவிடுகின்றது. தமிழ் தேசத்திலே தமிழ் எங்கும் நிறைந்திருக்கிறது. அடிக்கும் காற்றில்,—வீசும் வாசனையில்,-ஓடும் நீரில்,—குமரிச்சிரிப்பில்,–குழந்தையின் மழலையில்,—கோபுரத்தின் உச்சியில்,—தெய்வ வணக்கத்தில்,—பேசும் பேச்சில்,—நினைக்கும் நினைப்பில்,—படுக்கும் படுக்கையில்,—ஊட்டும் உணவில்,—பாடும் பாட்டில்,—அசையாமல் நிற்கும் மலையில்,–ஆளைக் கொல்லும் சண்டையில்,—அந்திப் பொழுதிலே அள்ளிவீசும் நிலவினில்,-அண்டத்தைக் கொளுத்தும் வெயிலில்,—அகிலங்களை யெல்லாம் விளைந்து நிற்கும் ஆகாயத்தில்,—பார்க்குமிட மெங்கணும் ஒரு ஜோதியென விளங்கி நிற்கிறது. அதன் மத்தியிலே "அம்மா" என்று அலறினால் அது விண்ணையே போய் முட்டும். "கடவுளே கண்ணில்லையா?" எனில் நம்முடைய கண்களிலே துயரத்தோடும் நீர் ததும்பும். இதையே நாம் அன்னிய பாஷையிலே சொன்னால் நமக்கு அவ்வித உணர்ச்சி எற்படுமா?

ஃ

இவ்வளவு பக்குவமான தமிழ் பாஷையை அமைத்துக்கொடுத்த நம்

---

பருவமடைந்த பெண்ணுக்கு வருஷங்கள் போய்க்கொண்டே யிருக்கின்றன. இன்னும் விவாகம் கூடவில்லை. அவளுக்கென்று கடவுள் விதித்த கணவன் எந்த ஊரில் இருக்கிறானோ யார் கண்டார்கள்?

முன்னோர்கள் பட்டிருக்கும் கஷ்டங்கள் நமக்குத் தெரியுமோ? ஒரு குழந்தை பிறக்க ஒரு தாய் எவ்வளவு வேதனைப் படுகிறாள்? அதை நாம் சகிக்க முடியுமா? பாஷையாகிய ஒரு குழந்தை பிறப்பதற்கு ஒவ்வொரு ஜாதியாரும் எவ்வளவு கஷ்டம் அனுபவித்திருக்க வேண்டும்? நம்முடைய வாழ்வின் நிமித்தம் கஷ்டப்பட்டு சம்பாதித்து வைத்திருக்கும் சொத்தை அனுபவிக்கத் தெரியாமல் அசட்டை செய்து முன்னோர்களை அவமதிக்கும் மனிதர்களாய் நாம் ஆகிவிட்டோம். ஒரு தமிழனுக்கு ஆங்கிலம் தெரியாதென்றால், அவனைக் கேவலப்படுத்துகிறோம். ஆங்கிலம் ஓதிய தமிழன் தமிழை மறந்து விட்டானெனில் அதைத் தாழ்மைப்படுத்திக் கூறுவதில்லை. ஆ! என்ன தலை கீழான பாடம்!

ஃ

அஸ்திவாரமில்லாமல் வீடுகட்ட முடியாது; சுவற்றின் மேலேதான சித்திரம் எழுதவேண்டும். நமக்கு முன்னோர்கள் இல்லையெனில் நமக்கு வாழ்வு இல்லை. கைச்சூடு பொறுக்காதவனுக்குக் கரண்டிச்சூடு பொறுக்காது. சொந்த வீட்டிலே மதிப்பில்லாதவனுக்கு அயல் வீட்டிலே மதிப்பு இராது. சொந்த பாஷை தெரியாதவனுக்கு அயல் பாஷை அர்த்தமாகாது. பாஷைபோனால் பாதி உயிர் போயிற்று. தமிழன் தன் தமிழ்த் தெய்வத்தை வணங்குவதற்குத் தமிழ் இல்லாமல் முடியாது. தமிழிலேயுள்ள பாடல்களைச் சொல்லித் துதித்தே அவன் முக்தி பெறவேண்டும். தமிழன் வேறு மொழியிலே கடவுளை வணங்குதல் விகாரமாகும்; அது பயன் படாது; உள்ளுணர்ச்சியுடனே அது எழுந்ததாகவு மாகாது.

ஃ

நாம் பார்க்கும் உலகப்படைப்புகளில் நமக்கு உண்டாகும் விருப்பு வெறுப்புகளை வெளியிடுவது நமது பாஷையே; நம்முடைய நாகரீகத்தை நமக்கு விளக்கிக் காட்டுவது நமது பாஷையே; நம்முடைய குழந்தைகள் வாய்திறந்து பேச எத்தனிப்பதும் நமது பாஷையிலேயே; ஞானப் பாட்டுகள் பாடிப் பிச்சை கேட்பதும் நமது பாஷையில்தான். இதுவரையில் இன்ப துன்பங்கள் யாவற்றையும் நாம் நம்முடைய பாஷையின் மூலமாகத்தான் அனுபவித்திருக்கிறோம். தாயின் அருமை தெரியாத பாபிகளுக்குத்தான் தங்கள் பாஷையின் மஹிமை விளங்காது. தன் பாஷையை விட்ட ஒருவன் அங்குமின்றி, இங்குமின்றி அந்தரத்திலே தொங்குவான். ஆங்கிலமே படித்த தமிழனுக்கு ஆங்கிலமும் சரிவர வராது; தமிழும் தெரியாது.பிறகு அவன் சுகம் அனுபவிப்பதெப்படி? ஏதோ வயிற்றைக்கழுவுவதிலேயே அவன் நாட்கள் கழிந்து படும்.

ஃ

தமிழன் ஏன் தமிழை விட்டான்? தமிழ் என்றாலே சிலருக்குக் கசப்பு. "அடே! இங்கிலீஷைப் படி, இங்கிலீஷில் எனக்குக் கடிதம் எழுது, தமிழ் பிறகு ஆகட்டும்" என்று தன் குமாரனை அதட்டும் தந்தைமார் எண்ணி

தன் மனைவியை அடித்துத் துரத்திவிடுகிறவன் அந்த ஆரம்பத்தில் தான் தள்ளலாம். வேறு கல்யாணம் செய்துகொள்ளப்போவதாகவும் சொல்லலாம். பிறகு நாட்கள் செல்லச்செல்ல தான் ஒண்டி மரமாய் நிற்பது அவன் மனதைக் குத்தி வாட்டாமலிராது. ஆயினும் அதற்கு ஏதாவது ஒரு மூடசமாதானம் சொல்லி ஒருவேளை தேற்றிக்கொள்வானோ யாதோ!

லர். தமிழ்பாஷை பேசினல் தம் வயிறு நிறைவதில்லையென்பது இன்னோது எண்ணம். வயிற்றையே பெரிதாகப் பாராட்டுபவன் மனிதக் கூட்டத்தில் சேர்ந்தவன் அல்லன் என்பது பெரியோர்களின் முடிவு. "மனிதன் சோற்றினலேயே மாத்திரம் ஜீவிப்பதில்லை" என்றுர் கிறிஸ்து. தாய்க்குச் செய்யவேண்டிய கடமையை மறுத்தல் தன் ஆத்மாவை இழத்தல் ஆகும். முன்னோர் பெருமை முகத்திலில்லாமல் வெறும் பேச்சிலிருந்து பயனில்லை. தமிழை விட்ட தமிழனுடைய அடிமைத்தனத்திற்கு ஆயுள் இன்னும் ஆயிரவருஷம் நீளும்.

ஃ

பாஷை பழகிப் பழகி ஒருவித காந்த சக்தியை யடைகிறது. அந்த காந்தம் ஒவ்வொரு வார்த்தையிலுமிருக்கிறது. அந்தந்த ஜாதியாருக்குத்தான் அவர்களுடைய பாஷையின் நயம் தெரியும்; பிறருக்கு விளங்காது; அதில் காந்த சக்தி இருப்பதாகவும் தெரியாது. இரும்புத் தூள்களாகிய தமிழருக்கு அவர்களின் பாஷை ஒரு காந்தம் போன்றதாகும். அந்த காந்தம்தான் தமிழர்களைக்கட்டி இழுத்து ஒன்று சேர்க்கும் வல்லமையுள்ளது. எந்த ஒரு வஸ்துவும் ஆதரவில்லாமல் அபிவிர்த்தியடையாது. அன்னியர்கள் நம்முடைய பாஷையில் அபிமானம் வைத்து அதை வளர்க்கவேண்டிய எற்பாடுகள் செய்யமாட்டார்கள். சொந்த பிள்ளைகளே தாயைத் தள்ளினல், அன்னியர்கள் அவளை அவமானப்படுத்தாம விருப்பார்களா? இந்தியாவுக்குப் பிரான்ஸ் தேசத்திலிருந்து வந்திருக்கும் பாதிரிகள் ஆங்கிலம் தெரிந்திருந்தும் தங்கள் தாய்ப்பாஷைதான் பேசுகிறுர்கள். அவர்களை மதியீனர்கள் என்று தள்ளிவிடுவோமா? வம்புப் பேச்சு பேசுகிறவர்களுக்குக் கம்பனருமை தெரியுமா? தாய் பாஷை பேசுவது அவமதிப்பு என்று எண்ணுகிற தமிழனுடைய வாழ்விலே களிம்பேறிப்போகும். தாய்ப்பாஷை யிருந்தால்தான் தமிழன் உயிர் வாழலாம்; அது செத்தால் தமிழனும்கூடச் சாகவேண்டியதே. ஆதலின், தமிழிலே தெய்வீக அன்பு கொண்டு தமிழ்த்தாயைக் கௌரவித்துப் போற்றக்கடவோம்.

---

## அவரவருக்கு வேண்டியவர்கள்.

ஒரு வீட்டில் அநேகர் இருக்கலாம். அதில் ஒருவரே தனக்கு வேண்டியவராக அமையக்கூடும். அவரைத் தேடிக்கொண்டு அவ்வீட்டுக்கு வருகையில், அவர் அங்கில்லாவிடில் உடனே திரும்பிவிடுவதன்றி அங்கு தங்க மனம் இசைவதில்லை. தனக்கு வேண்டியவர் வீட்டில் இல்லாவிடில் அந்த வீடு அன்னிய வீடாகவும் வெற்று வீடாகவும் ஆகிறது. வீட்டார் நம்மை இருக்கும்படி கூறினும், மனம் பிடிக்காமல் அப்போதே ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்துவிடுகிறேம். அந்த ஒருவர்பொருட்டே மற்றவர்களையும் நாம் நேசிக்கிறேம்—உறவு பிடிக்கிறேம். குலாவுகிறேம்.

# கல்யானை.



வலிமையில் யானைக்கு இரண்டாவதான மிருகம் கல்யானைதான். அது கொஞ்சங் குறைய யானை அவ்வளவு பரிமாணமுள்ளது. அது ஏறக்குறைய பன்னிரண்டடி நீளமும், ஆறேழடி உயரமும் உடையது. அதன் கால்கள் குட்டையாயிருக்கும். அதின் தலையில் நாசியினின்று முளைத்தகொம்பு ஒன்றுண்டு. அதின் மேலுதடு நீண்டு கூராயிருப்பதனால், அதன் இரையைக் கும்பலாய்ச் சேர்த்து வாயில் போட்டுக்கொள்ளப் பக்குவமாயிருக்கின்றது.

ஃ

அதன் உடம்பில் உரோமக் கவர்ச்சியில்லாமல் தோல்கள் மாத்திரம் மடிந்து மடிந்து தொங்குகின்றன. அந்த மடிப்புகளுள் தோளண்டையும் வாலண்டையும் இருக்கிற இரண்டு மடிப்புகள் மிகவும் முக்கியமானவை. அதின் தோல் கபில நிறமுள்ளது. அது அதிகக்கூர்மையுள்ள கத்திபோல் இருக்கும். அதின் கொம்பானது ஒவ்வொன்றுக்கும் மூன்றடிக்கு அதிகமாயும் நீண்டிருக்கும். அது அதிக உரப்பான எலும்பினின்றும் உண்டாகின்றது. இப்படிப்பட்ட ஈட்டி போன்ற சிறந்த ஆயுதம் அதற்கு இருக்கின்றமையால், அது யானை, புலி முதலியவைகளைக்கூட லக்ஷியஞ் செய்கிறதில்லை. அதன் கல்லான தோல் அதிவலிமையான சிங்கம் முதலியவைகளின் நகங்களுக்குக்கூட அசையமாட்டாது. ஆதலால், கல்யானையைப் பார்த்துப் பயப்படாத மிருகம் ஒன்றுமில்லை.

ஃ

கல்யானைகள் ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலுமுள்ள பெருமணல் வெளியான காடுகளில் இருக்கின்றன. இலை, தழை முதலியவைகள்தான் அவைகட்கு முதன்மையான உணவு. அதனால் அது இயற்கையாய் ஒன்றுக்கும் தீங்கு செய்யத்தக்கதன்று. புலி சிங்கங்களைப்போலத் தன் பசிக்காக எந்தப் பிராணியையும் கொல்ல வேண்டிய அவசியம் அதற்கு இல்லை. ஆனால், தைரியத்தில் குறைந்ததென்கிறீர்களோ, அன்று. ஏதாவது வேறொரு ஜந்து பிடுங்கிப் புசிக்க மாட்டாத முட்செடிகளையும் முன் தழைகளையுமே அவை முக்கியமாய்ப் புசிக்கின்றன.

ஃ

கல்யானைகளைப் பிடிப்பது வெகு வருத்தம். அவைகள் தூங்கவும் நடமாடவும் உரித்தான சதுப்பு நிலங்களில் குட்டியோடு சஞ்சரிக்கிற தருணம் பார்த்துப் பெரியதைக் குண்டு வைத்து அடித்துக் கொன்றுவிட்டுக்

---

தன் ஸகோதரியின் குமார்த்தியானாலும் தான் அவளை மணந்தால்மட்டும் தான் சொந்தமே தவிர, அவள் இன்னொருவனின் மனைவியாய்விட்டால் பிறகு அவள் அன்னிய உடமை போலத்தான். அவளோடு தான் பேசுவதைக் கூட அவள் கணவன் சந்தேகக் கண்களோடு பார்க்கும்படியும் நேரிட்டுப் போகலாம்.

குட்டியைப் பிடித்துப் பழக்கவேண்டும். அதன் தோல் குண்டுக்கன்றி மற்றொன்றக்கும் அசையமாட்டாது. உயிரோடு கல்யானையைப்பிடிக்க முடிகிறதில்லை. அவைஒடத்தலைப்பட்டால் ஒருவருக்கும் அகப்படாது. பெரிய முட்புதர்களை யெல்லாம் அலக்ஷியமாய் எழும்பித் தாவும். எவ்வளவு அடித்தாலும் அதின் உடம்பில் உறைக்கிறதில்லை. தேகத்தில் வெடிகுண்டுகள்போய்ப் பொத்திக்கொண்டாலும் அதையும் லக்ஷியம் செய்யாது எதிர்த்தோடி வருமேயன்றிப் பின்வாங்காது. புஜம் இருதயம் முதலிய இடங்களில் அடிபட்டால் மட்டும் தாங்காது. இவ்வளவு வலிவுள்ள பிராணியாக இது இருப்பதால்தான் இதைக் கல்யானை என்று அழைக்கிறார்கள் போலும்.

## பிறகே தெரிகிறது.

ஒரு மனிதனைப்பற்றி மிக்க மேன்மையான எண்ணங்கொண்டு வளர்க்கிறோம். அவனைத் தர்மபூஷணம் என்று மதிக்கின்றோம். அவனை ஓயாது கொண்டாடி நிற்கிறோம். இவ்வாறுள்ள சமயத்தில் நம்மைச் சந்தித்த ஒருவன்—“அந்த மனிதனா?—என் வயிற்றில் அடித்தவனாயிற்றே! என் பணத்தை மோசம் செய்தவனாயிற்றே”—என்கிறான். நாம் திடுக்கிடுகிறோம். அதை நம்ப முடியவில்லை. ஏதோ ஒவ்வொரு மனிதனிடமும் சிறிது பிழை இருக்கலாமென்றும், அதையே அதிகமாகப் பாராட்டவொண்ணாதென்றும் நினைத்து மறந்துவிடுகிறோம். பின்னும் சிலநாட்கள் பொறுத்து மற்றொரு அன்பர் நம்மைச் சந்திக்கும்போது—“நீர் சிலாகிக்கும் மனிதன் வெகுநாளைக்குமுன்பே என்னை மோசம் செய்த மகா தந்திரசாலி”—என்கிறார். “அப்படியா?” என்று நாம் வியப்படைகிறோம். கடைசியில் நாம் நம்பி நின்ற மனுஷ்யன் நம்மையே மோசம் செய்து நமது தலைக்குப் பட்டுக்குல்லாவைப் போட்டுவிடுகிறான். அப்போதுதான் அந்த மனிதனின் உண்மையான குணத்தை நாம் அறிய நேர்கிறது. மற்றவர்கள் எவ்வளவோ எச்சரித்தும் கவனிக்காமல் நம்பிக்கிடந்தோமே என்று நொந்து கொள்கிறோம். எதுவும் பிறகே தெரிகிறது. முதலில் தெரிகிறதில்லை. கடியுண்ட பிறகே தேள் என்று அறிகிறோம்.

வீட்டில் பணியாரம் பக்ஷணம் சுடவில்லையே என்று விசாரம். அவ்விதமே செய்தாலோ அவற்றைப் பங்கிடுவதில் சிறுசண்டை மனஸ்தாபங்கள் கூடிக்கொள்கின்றன. இந்தா கூடையோடும் தொலைத்துக்கொள்ளு—கொட்டிக்கொள்ளு என்ற பிரியமான வார்த்தைகளும் புறப்படுகின்றன.




# இராஜசந்திரன்

## அல்லது—மறைந்த கைதி.



### அத்தியாயம்—11.

#### கண்ணப்பனின் ஓயா முயற்சி.

(228-ம் பக்கத் தொடர்ச்சி.)

### XII.

மறுநாட் காலையில் பொன்னுசாமி வழக்கம்போல் சாரதா விலாசத்திற்கு வந்து விட்டான். கமலா அவனிடம் வழக்கம்போல் பேசினான். பொன்னுசாமி அன்று மத்தியானத்திற்குப் பிறகு மறுபடியும் வெளியூர்களுக்குப் புறப்படப் போவதாயும் கூறினான். கமலா அதற்குப்பதில் சொல்லவில்லை. இரவு வந்ததும் பொன்னுசாமி விடை பெற்றுச் சென்றான். மறுநாட் காலையில் கமலாவை வீட்டில் காணவில்லை. கண்ணப்பன் வெகு கவலையுடன் தேடினான். அவன் எவ்வளவு முயற்சி செய்தும் கமலா அகப்படவில்லை. நேற்றிரவு தன் அறையில் சயனித்திருந்தவள் காலையில் போன இடம் தெரியவில்லை. வீட்டின் தலைவி இல்லாத வீட்டினது அலங்கோலம் சொல்லவும் கூடுமோ? அன்புடன் ஒருவரையொருவர் விரும்பி வாழ்பவர்கள் நெடுநாள் சேர்ந்திருக்க முடியாமல் ஏதேனும் ஒரு பிணக்கோ, தடையோ, மரணமோ குறுக்கிட்டுக் கொண்டு பிரித்துவிடுகின்றது.

---

### அத்தியாயம்—12.

#### ஊருக்குத் திரும்பிய அபிராமி.



ஒரு நாட்காலையில் கண்ணப்பனின் வீட்டிற்கு அலங்காரமாக உடுத்திக் கொண்டிருந்த யுவதியான ஒரு பெண் வந்து "இவ்வீட்டில் ஜானகியம்மாள் இருக்கிறார்களா?" என்று கேட்டாள். ஜானகியும் உள்ளேயிருந்து வரவும், அவளை நோக்கி அந்த சுந்தரி "அக்கா க்ஷேமந்தானா?" என்றாள். அவள் தன் தங்கையான அபிராமியென்றறிந்து பிரியத்துடன் அவளது கரங்களைப் பற்றினாள்.

ஜானகி:—ஐயோ! தங்காய், நீ அந்தப் பாழும் இராஜசந்திரனை நம்பி ஓடிப்போய்க் கற்பு கெட்டு விட்டாயே? தந்தையைக் கொன்றவனோடு

சகவாசம் செய்யலாமா? நீ விவாகம் இன்றி அலங்கோலப்பட்டு நம் குடும்பதிற்கே பெரும் அபகீர்த்தியை உண்டாக்கி விட்டாய்.

அபிராமி:—அக்கா, நிதானித்துப் பேசு. என் கழுத்திலிருக்கும் மாங்கல்யத்தைப் பார்த்தாயா? நான் விவாகமான பெண்ணென்று தெரிந்துகொள். என் கணவர் மைசூர் அரண்மனையில் வேலையாக இருக்கிறார். உன்னைப் பார்த்துப் போகவே இங்கு வந்தேன்.

ஜானகி:—அவ்வாருயின் நீ இராஜசந்திரனுடன் ஓடிப்போக வில்லையா? ஊரா ரெல்லோரும் அவ்விதம் தான் சொல்லுகிருர்கள்.

அபிராமி:—இராஜ சந்திரனுக்கும் எனக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. அவனிடம் நான் எந்தக் காலத்திலும் சிநேகித்ததேயில்லை. அவன் என்னைக் காதலித்து அலைந்ததுண்டு. நான் அதற்கு இடம் தாவில்லை. என் தந்தையைக் கொன்ற பாதகனுடன் காதல் பாராட்டுவதா? அவனைவிட ஓர் இழிகுலத்தோனிடம் காதல் கொள்ளலாம்.

ஜானகி:—இராஜ சந்திரனும் நீயும் ஏககாலத்தில் மறைந்து விட்டதால் உன்மீது ஊரார் சந்தேகிக்க சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டது.

அபிராமி:—அந்தப் பாவியைத் தூக்கிலிட்டுக் கொன்ருய்விட்டதல்லவா? இனி அந்தக் கிராதகனின் பேச்சுகளே வேண்டாம்.

ஜானகி:—இராஜ சந்திரனுக்கு இன்னும் தண்டனை விதிக்கப்படவில்லை. இவ்வூரிலேயே இப்பொழுது மறைந்துகொண்டு திரிகின்ருனும்.

அபிராமி:—என்றைக்காவது அந்த சண்டாளன் தூக்கிலிடப் படுவது நிச்சயம். அவன் எங்கேயாவது கெட்டுப்போகட்டும். கொடிய கொலைப் பாதகன்.

என்ருள். அத்தருணத்தில் கண்ணப்பன் கச்சேரியிலிருந்து வீட்டிற்குள் நுழைந்தான். ஜானகி அவனுக்கு அபிராமுவைப் பரிச்சயம் செய்து வைத்தாள். கண்ணப்பன் அபிராமி யென்றதும் ஆச்சரிய மடைந்தான்.

கண்ணப்பன்:—உன் தந்தையைக் கொன்றவர்கள் இன்னுரென்று உனக்கு நன்ருகத் தெரிந்திருக்கலாம். எவர் கொன்றவர்?.

அபிராமி:—ஊர் முழுதுமே இராஜசந்திரன் கொன்றதாகச் சொல்லுமே.

கண்ணப்பன்:—ஊரார் என்ன நேரில் கண்டார்களா? நடந்த உண்மை உன்னொருத்திக்கே தான் தெரியும்.

அபிராமி:—இராஜசந்திரன் தவிர வேறு யாரும் என் தந்தையைக் கொலை செய்யவேண்டிய காரணமேயில்லை.

கண்ணப்பன்:—நான் எல்லா விஷயங்களையும் நன்ருக விசாரித்து வைத்திருக்கிறேன். நீ என்னை ஏமாற்ற முடியாது. கொலை நடந்த அன்றிரவு தங்கவேலு என்ற ஒருவன் உன்னிடம் பேச வந்திருந்தானல்லவா? எதையும் மறைக்காமற் சொல்.

---

சிலர் தங்கள் நண்பனுக்குக் கடன் கொடுத்துவிட்டு, அதை அவனே வலிய வந்து தரும்போது ஏற்றுக்கொள்ளுகிறதென்று மௌனமாயிருந்துவிடுகிருர்கள். கடன் வாங்கிய நண்பனே சத்தியவந்தனு யிருந்துகொண்டு, தான் எதிர்பார்த்த பணம் வந்தபிறகு அவர்களின் கடனைக் கொடுத்துவிட்டுக் குலாவுகிருன். இத்தகையோர் மிகவும் சொற்பமே.

அபிராமி:—(வியப்புற்று) ஆம், வந்திருந்தான். அவனுக்கும் கொலைக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை.

கண்ணப்பன்:—அவனுக்குத் தங்கவேலு என்பது சொந்தப் பெயரா? அல்லது மாற்றுப் பெயரா?

அபிராமி:— அவனுக்கு வேறு பெயர் இருந்ததாகத் தெரியவில்லை. தங்கவேலு என்பதே அவனது உண்மைப் பெயரென்று நினைக்கிறேன்.

கண்ணப்பன்:— அவனுக்கு வேறு பெயருண்டு என்பது எனக்குத் தெரியும். நீ இதுவரையில் அவனோடுதான் சுற்றித் திரிந்தாய்போ லிருக்கிறது.

அபிராமி:—நான் விவாக ஸ்திரீ; என் கணவர் மைசூரில் இருக்கிறார். என்னை இழிவாகப் பேசவேண்டாம்.

கண்ணப்பன்:— அந்தத் தங்கவேலுதான் உன் தந்தையைக் கொன்றவனாகவேண்டும்.

அபிராமி:—அது சுத்தப் பொய். அவர் தக்க கௌரவ குடும்பத்தைச் சேர்ந்தவர். அவர் ஒருபோதும் கொலை செய்திரார். அத்தருணத்தில் அங்கு உலாவிக்கொண்டிருந்த இராஜ சந்திரனே என் தந்தையைக் கொன்றவன். கொன்றுவிட்டுத் துப்பாக்கியுடன் ஓடியவனும் அவனே. தங்கவேலு என் அருமைத் தந்தையைக் கொலை செய்திருந்தால் அன்னியனாகிய அவனுக்குப் பரிந்து நான் பேச வேண்டிய காரணமென்ன? அவன் எனக்கு என்ன உறவா?

கண்ணப்பன்:—இதன் உண்மையை எவ்வாறறிவதோ தெரியவில்லை. அன்றைய இரவு எதிராஜனும் லக்ஷ்மணசாமியும் அங்கு உலாவிக் கொண்டிருந்தார்களல்லவா? அவர்கள் கொலை செய்திருக்கக் கூடுமென நீ ஏன் நினைக்கக்கூடாது? அவர்களைப் போலத்தானே இராஜ சந்திரனும் அங்கு உலாவிக் கொண்டிருந்தான்?

அபிராமி:—நீங்கள் இராஜ சந்திரனைக் காப்பாற்ற முயல்வதாக எனக்குத் தோன்றுகிறது. நீங்கள் லாயர் சாமர்த்தியத்தைக் காண்பித்து என்ன கூறியபோதிலும் உண்மைக் கொலையாளி அந்தப் படுபாவிதான் என்று எனக்கு நன்றாகத் தெரியும். யார் என்னை எத்தனை தரம் கேட்டபோதிலும் நான் இதைத்தான் கூறுவேன், எதிராஜனும், லக்ஷ்மணசாமியும் இராஜ சந்திரனைப்போல் ஓடிப்போய்த் தலை மறைந்து நிற்கிறார்களா? துப்பாக்கி இராஜ சந்திரனிட மிருந்ததா? அவர்களிட மிருந்ததா? துப்பாக்கியைக் கீழே போட்டு விட்டு அந்தப் பாவி ஏன் ஓடி மறையவேண்டுமோ? என்னைத் தருவதற்கு மறுத்துவிட்ட என் தந்தையைக் கொன்று என்னையடைய விரும்பினான். நான் அதற்கு இணங்கவில்லை.

என்று கூறிவிட்டு, ஜானகியிடம் வந்து விடை பெற்றுச்சென்றாள். அவள்போய் விட்டபின்பு அவள் கூறியது உண்மையா?— அல்லது இராஜ சந்திரன் தன்னிடம் கூறியிருப்பது உண்மையா?—எனக் கண்ணப்பன் யோசித்துக் கொண்டிருந்தான்.

---

## அத்தியாயம்—13.

### இராஜசந்திரனின் நிகில்.



கமலவல்லி காணாமற் போய் ஒரு மாதத்திற்குமேலாயிற்று. கண்ணப்பன் துக்கசாகரத்தில் மூழ்கியவனைத் தத்தளித்துக் கொண்டிருந்தான். கமலாவின் குழந்

தைகள் இருவரும் தங்கள் தாயைக் தேடி வாடின. கண்ணப்பன் மிகுந்த வியஸனத்துடன் தன் வேலைகளைச் செய்து கொண்டிருந்தான். கிருஷ்ண வேணியும் அவள் தந்தையும் கமலா எங்கும் அகப்படாததற்கு மிகவும் துக்கித்து நின்றனர். ஒரு நாள் இரவு கண்ணப்பன் தன் அறையில் தனியாக உட்கார்ந்திருக்கையில் ஒரு கட்டையை யூன்றிக்கொண்டு நடந்து ஒரு மனிதன் அந்த அறைக்குள் பிரவேசித்தான். அவன் நடக்கவே சக்தியற்றவனுய் மிகவும் இளைத்து உருமாறி யிருந்தான். அவனை இராஜசந்திரனென்று கண்ணப்பன் அறிந்ததும் வியப்புற்றவனுய், "இதென்ன அலங்கோலம், உன் தேகத்துக்கு என்ன?" என்று ஆத்திரத்துடன் வினவினுன்.

இராஜ சந்திரன் :—நான் ஒரு சங்கதியினுல் பெருந்திகில் பட்டுப்போய் என் வீடு சேர்ந்ததும் எனக்குக் கொடிய ஜ்வரம் வந்து விட்டது. என்னை அன்புடன் கவனிக்க வேறு திக்கில்லை. நான் ஆஸ்பத்திரியில் படுத்துக்கொள்ளலா மென்ருலோ, என் தந்தைக்கு அது எவ்விதமும் தெரிந்துவிடும். அவர் என்னைப் போலீஸாரிடம் காட்டிக்கொடுத்து விடுவார். அவர் துப்பாக்கியில் போடக்கூடிய கருமருந்துக்குச் சமமாவார்.

"கரு மருந் தறையிற்
சிறு பொறி சிதறினும்
பெரு நெருப் பன்றே?
பின்பார் தடுப்பர்?"

ஆதலின், வேறு எந்த அந்தரங்க மனிதரும் கிடைக்காமல் தவித்தபாடு பகவானே அறிவன். எவ்வவோ என்கதி இவ்வாருயிற்று. ஒரு மாதமாய்ப் படுக்கையிற் கிடந்து செத்துப் பிழைத்து, எனக்கு சற்று நடக்க சக்தி யுண்டானதும் உன்னைக் காண்பதற்காக வண்டியில் ஏறி இங்கு வந்தேன்.

"கெட்டார்க் குலகி
னட்டா ரில்லை."

கணணப்பன் :—ஐயோ பாவம்! உனக்குள்ள துன்பங்கள் போதாதென்று ஜ்வரம் வேறேயா வந்தது. உன் அடையாளமே தெரியவில்லையே? இந்த நிலையில் உன்னை உன் தாய் கண்டால் பெற்ற வயிறு எப்படிக் கொதிக்குமோ?

இராஜ சந்திரன் :—தங்கை கமலம் காணமற் போனதற்கு நீ வெகுவாய் துக்கித்திருப்பாய். எல்லாம் காலபேதத்தின் செயல். அதைப்பற்றி நீ ஒன்றும் வருந்தாதே. என் கமலம் ஒரு தெய்வப்பிறவி. அவளுடைய கணவனுகிய உனக்குப் பகவான் ஒரு குறைவும் வைக்கமாட்டார்.

கண்ணப்பன் :—கடைசியில் நீயும் மற்றவர்களைப்போல எனக்கு சாதாரணத் தேறுதல் சொல்லவாபுறப்பட்டு விட்டாய்? கமலத்தைப் பிரிந்து நான் இனி வாழ்வது வீண். குழந்தைகளுக்காகவே யோசிக்கிறேன்.

இராஜசந்திரன் :—நான் ஏதோ சாதாரணமாகத் தேறுதல் கூறினேனென்று வருந்தாதே. என் முழு மனதுடனும் உன்னைத் தேற்றுவதற்காகவேதான் இங்கு வந்தேன்.

என்று தன் நிர்ப்பாக்கியமான நிலைமைகளை யெல்லாம் தெரிவித்து அழுதான். (தொடரும்.) S. G. R.

---

ஒருவரின் இயற்கைக் குணம் ஏமப்பித்து கொண்டதா யிருக்கலாம். அதைக்கொண்டு அவரது வித்துவத்தன்மையைக் குறைத்துப் பேசக்கூடாது. பேசினும் வித்வத்தன்மை குறையாது. அது வேறு சங்கதி. இது வேறு சங்கதி.



# ஹாஸ்ய சஞ்சீவினி



கதாசிரியர் :—நான் இப்பொழுது எழுதிவரும் நாவல் 400-பக்கங்களாக லாம்.

நண்பன் :—4000-பக்கங்களானு லுங்கூட என் போன்றவர்கள் இலவச நுழைப்பில்தான் பெறப்பார்ப் பார்கள்.

ஃ

முருகன் :—என் ரூபாய்களைக் கொடுத்துவிட்டு நோட்டாகப் பெற் றுக்கொண்டாய்?

மாணிக்கம் :—சில்லரையாகக் கடன் கேட்க வருகிறவர்களுக்கு ரூபா யில்லை, நோட்டாக இருக்கிறது என்று எடுத்துக் காட்டுவதற்குத் தான்.

ஃ

மோத்து :—ஒரு நங்கையை வசப் படுத்திக் காரியமான பின்பு அவளைத் துரத்தி விடுவதுபோல, ஒரு புஸ்தகத் தைப் படித்தான பின்னர் அது இனி எதுக்கென்று எறிந்துவிட வேண்டி யது தானே?

முத்து :—நற்குண நங்கை விவா கத்திற்குப் பிறகே வசப்படுவாள். என்றைக்கும் தன் கணவனுக்கு இன் பக் கட்டியாவாள். அவ்விதமே, உய ரிய கருத்துகளுள்ள நூல்களும் எறிந்து விடுவதற் கில்லாமல் இப்போ தைக்கு மட்டுமேயன்றி என்றைக்கும் அவை உதவக் கூடியதாயிருக்கும்.

ஃ

வினு :—செவ்வாய்க்கிழமை க்ஷவ ரம் செய்து கொள்ளலாமோ?

விடை :—ஆத்திரத்திற்கும் அவ சரத்திற்கும் சாஸ்திரத்தைப் பார்க்க அந்த சமயத்தில் நேரமிராது.

ஃ

சாஸ்திரி :—நாம் பண மூட்டை கட்டுவதற்காகத்தானே இந்தப் புரோ கித வேலை செய்கிறோம்.

மேஸ்திரி :—உட்கருத்து அதுவா னாலும், வெளிக்குப் பரோபகார நிமித்தமாகவே வேலை செய்வதாகக் காண்பித்தால்தான் அதிக வரும்படி ஏற்படும்.

ஃ

சேஷி :—அவன் சொன்னதை என்னிடம் சொல்லக் கூடாதா? என்ன? நான் யாருக்கும் சொல்ல மாட்டேன். ரகசியமாக வைத்திருக் கிறேன். என்னை நம்பு.

சுப்பி :—அவன் உன்னைப் பக்கா திருடி—என்று சொன்னான். அவன் கால் கொலுசை நீதான் கொண்டு போய் விட்டாயாம்.

ஃ

வினு :—பத்திராசிரியர் என்றால் என்ன அருத்தம்?

விடை :—தம்முள் எழுந்த எண் ணத்தை மறைத்து, வேறுவிதமாகப் பக்குவமாய் எழுதி, 'சட்டம்' என்ற பூச்சியின் கடிக்குத் தம்மால் இயன்ற

---

ஒரு சுந்தரியை ஒருவன் வசப்படுத்த முயன்ற வழிகளை ஒரு கதையில் படிக்கும்போது, தானும் அவ்விதமே முன்னொருசமயம் முயன்ற விஷயங்கள் ஞாபகத்துக்கு உடனே தோன்றலாம்.

வரை உட்படாமல் தப்பித்துக் கொள்ளுகிறவர் என்று அருத்தம்.

ஃ

சிஷ்யன் :—ஒருவன் எப்போது துரோகம்—மோசம் பொய்ப்பாவம் முதலியவற்றைப் புரிவான் ?

குரு :—தனக்கு அழிவு காலம் மிகவும் நெருங்கி ஸமீபிக்கும்போதுதான்.

ஃ

வாசவன் :—நீ ஒருவனின் மனைவியை நகைகளோடும் இழுத்துக் கொண்டு போய்விட்டாயென்று போலீஸார் உன்னைத் தேடினார்களே?

கேசவன் :—ஆமாம். நானும் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று அந்தப்பெண் என் உடன் பிறப்பான தங்கையென்றும், கணவனின் கொடுமைகளைப் பொறுக்காமல் அழைத்து வந்து விட்டதாகவும் கூறினேன். ஃ

கோபு :—நாளைக்கு ராமனுக்குக் கல்யாணமாயிற்றே, நீ போகப் போகிறாயா ?

கோக்கு :—அவன் என் விவாகத்திற்கு வெள்ளி டம்ளர் வைத்து மிக மரியாதை செய்தான். அதை இப்போது திருப்பிச் செய்ய வேண்டுமானதால் நான் போக முடியாது.

ஃ

வரதன் :—உனக்கு எல்லாப் பத்திரிகைகளின் சங்கதியும் தெரிந்திருக்கிறதே ? ஒரு மாதத்தில் பத்திரிகைளுக்காக எவ்வளவு ரூபாய் செலவிடுகிறாய் ?

நாராயணன் :—ஒரு காசும் செலவிடவில்லை. அதது கிடைக்குமிடம் சென்று இரவலிலேயே வாசித்து விடுகிறேன். ஃ

—"உன் பெண்ணுக்குக் கல்யாணம் ஆச்சா ?"

—"ஆச்சு."

—"சாந்தியாச்சா ?"

—"ஆச்சு."

—"எத்தனை குழந்தைகள் ?"

—"அதுதான் இன்னும் காணோம்."

ஃ

குப்பன் :—நீ கண்ட விநோதம் என் ?

சொக்கன் :—இன்று நான் சென்னை பிராட்வேய்க்கு போயிருந்தபோது எரும்புமீது எலெக்டிரிக் டிராம் பாய்ந்து ரத்த வெள்ளம் ஓட அதில் இரண்டுபேர் மெதக்க நான் தூக்கப் போனதற்கு என்னையும் இழுத்துக் கொண்டு போகப் பார்த்தது. நான் தப்பியது தம்பிரான் பாடு.

இப்படிப்பட்ட அதிசயம் எப்பொழுதாவது பார்த்தாயா ? விகடன் தான் பார்த்தான். நான்தான் கேட்டேன். "இதைச் சொன்னால் யார் நம்புவார்கள்."

ஃ

சிஷ்யன் :—ஒருவன் இன்னொருவனிடத்தில் அதிக விஸ்வாசம் காண்பித்து மகிமைப்படுத்தினால் அதை என்னவென்று நினைக்கிறது ?

குரு :—அது உண்மையாகத் தானோ ?—அல்லது கபடமோ?—

எய்த்தலோ? யாதோ! எல்லாம் சில நாள் இருந்து பார்த்தால் சகலமும் தெரிந்துவிடும்.

ஃ

ராமநாதன் :—காலையில் உன் வீட்டில் ஏதோ கடா புடா சப்தமாயிருந்ததே? என்ன சங்கதி?

ஜகந்நாதன் :—என் மனைவி சமைக்காமல் முக்காடிட்டுப் படுத்துக் கொண்டிருந்தாள். திட்டிவிட்டு சமைக்கும்படி சொல்லிச் சென்றேன். திரும்பி வந்து பார்க்கையில் ஜன்னல்களை மூடிவிட்டு இருட்டில் படுத்துக் கிடந்தாள். ஓங்கி ஒரு அறைகொடுத்தேன். உடனே அடிபட்ட தன் கன்னத்தைத் தடவிக்கொண்டு "உன் மனைவி ஜலம்கொண்டுவரப் போயிருக்கிறு"ளென்று என் மாமி கூறினள். அறை இருட்டாயிருந்ததால் என் மாமியை என் மனைவி என்று நினைத்து விட்டேன்.

ராமநாதன் :—உனக்குப் பெண் கொடுத்ததற்கு உன் மாமி அடிபட வேண்டியதுதான்.

ஃ

வினு:—ஒன்றின் அருமையை ஏன் தெரிகிறதில்லை? அதை ஒரு அருமையாக ஏன் மதிக்கிறதில்லை?

விடை :—அது எங்கும் வழக்கமாய், அதற்கென்றே ஏற்பட்டதாய், லோக சகஜமாய், கிட்டாதென்று அருமையாக நினைத்தகாலம் போய் இப்போது சொந்த சொத்தாகி விட்டதாலுந்தான்.

## திடீரென்று நின்றுவிடுகிறது.

பல வேலைகளைச் செய்துகொண்டிருக்கப்பட்ட மனிதன் திடீரென்று தன் வேலையை நிறுத்திவிடுகிறான். இன்னும் பல வேலைகளை அன்றே முடித்துவிடுவதென எண்ணியிருந்தும், அதையும் பிறகு செய்வதென்று தள்ளிவைத்துவிடுகிறான். காரணமென்ன? அவ்வளவுதான் செய்ய சக்தி யென்றும், மற்றவைகளை இப்பொழுது செய்ய இயலாதென்றும் அவனுக்குத் தோன்றிவிடுகிறது அவனது மூளையில் ஒருவித மயக்கமும் கனமும் ஏற்பட்டுவிடவே, இனி முடியாதெனத் தன் வேலைகளை நிறுத்திவிடுகிறான். தான் ஓரிடத்திற்குப் போகவேண்டிய அவசரம் ஏற்பட்டு அந்த நேரம் நெருங்குகையில், உடனே தனது வேலைகள் நிறுத்திவிட்டுத் தான் புறப்படத் தயார் செய்துகொள்கிறான் இதனாலும் வேலைகள் பாதியில் நின்றுவிடுகின்றன. ஆனால், எல்லா வேலைகளையுமே முடித்துவிடுவது என்று ஆதியில் அவன் எண்ணியிருந்தான். முடிவோ வேறுவிதமாகிறது. எதுவும் நம் வசயலில் இல்லை.

# தன்மதிப்புடனே நிமிர்.

அன்பு இலராயின் ஏன் அவரை நாட?
அங்கு ஏன் போக?—பணிய?—பேச?
அவர் வரையில் அவர்; நம்வரை நாம்.
மதியாது மீறினோர் வாசலை மிதிப்பதா?
தன்மதிப்புள்ளவன் தலை வணங்குவனா?
கபடம் கண்டதும் விலகலே இயல்பு.
பசப்பு மொழியினர் ஒரு விஷ நாகமே.
துள்ளும் கர்வியை நீ மிதி; உட்படேல்.
படைத்தவன் காப்பான்; கவலை ஏன்?

உன் உள்ளத்தின் உறுதிக்குத் தக்கபடி உன் வாழ்வு. அதிக வணக்கம் தாழ்வு. மிக மிகக் கெஞ்சுதல் இழிவு. பிறர் மதிப்பு உன் கையிலே.

அகந்தையினர் நமக்கு ஒரு சிறு துரும்பே
புது மகத்துவ வாழ்வில் நற்குண மிராது.
விசுவாசமற்ற நெஞ்சு ஒரு பாலைவனமே.
அவர் நல்லோராயின் நான் பிரிந்திரேன்.
பழகிய அன்பரை என்றும் நினைந்திடுவேன்.
வலியச்செல்வதுமில்லை; பேசுவது மில்லை.
சத்திய நெஞ்சுக்கு எங்கும் தைரியமுண்டு.
சமமற்ற மனிதனிடம் அதிகவார்த்தைஏன்
கீழ்குணமுள்ளோனுக்குக் கீழ்ப்படிவதா?
நமது மதிப்பே முதலில்; பிறகே மற்றது.
எவராயினேன்? நீ கம்பீரமாக நிமிர்ந்திடு.

மிஞ்சினோரிடத்து அஞ்சுதல் என்றுமில்லை.
சிரித்துகுலுக்குவது கபடம் மறைக்கவே
சொல்நாணயம் தவறின் வருவது ஈனம்.
நம் அருமையுணராதவனை மறந்திடுக.
செல்வ/கற்றவ ராயினும் தீயரை நான் அணுகிடேன்
கடவுளை நம்பியவனுக்குளங்கும் புகழே.

# சந்தித்த தித்திப்பு.

துளசிங்கம் :—ஏது நீயும் சினிமா பார்க்கவந்து விட்டாய்? உனக்கு எப் பொழுதுமே ஒழிவு கிடையாதே? உன் கையில் இருப்பது என்ன பத்தி ரிகை?

பாலசுந்தரம் :—உன்னை இங்கு கண்டது மிக்க ஸந்தோஷம். இது "அமிர்த குணபோதினி." உனக்கும் வருகிறதல்லவா?

துளசிங்கம் :—இந்தக் காலத்துப் பத்திரிகைகளின் போக்கே எனக்குப் பிடிக்கவில்லை. பழய நாளில் "ஜந விநோதிநி" என்று ஒரு பத்திரிகை இருந்தது. ஒரு முப்பது வருஷங்கள் வரை மாத ஸஞ்சிகையாக நடந்த தாம். அதை நானும் பார்த்திருக்கி றேன். அதற்கு ஈடாக மற்றொன் றைச் சொல்லமுடியாது.

பாலசுந்தரம் :—உனக்குப் பத்தி ரிகைகளின் சுவை நன்ருகத் தெரிந் திருக்கிறது. அந்தப் பழய "ஜன விநோதிநி"யை யனுசரித்தே இந்த "அமிர்த குணபோதினி"யும் எழுதி வரப்படுகின்றது. நீ தெரிந்து கொள்ள இயலாத எத்தனையோ உலக அதிசயங்களும், உன் மனத்திடையே மறைந்துள்ள அனுபவங்களும் இந்த அமிர்த குணபோதினியில் ஏராளமாக உள்ளன. இதை ஒரு முறை வாசித் துப் பார்த்தால் இந்த அமைப்பில் இதற்கு நிகரான பத்திரிகை வேறில்லை யெனக் காண்பாய்.

துளசிங்கம் :—நானும் சென்ற வரு ஷம் "அமிர்த குணபோதினி"யின் ஒரு பிரதியைப் பார்த்தேன். உலக அனுபவங்களையே போதிக்கும் உய ரிய பத்திரிகை யென்று தெரிந்து கொண்டேன். பழய "ஜநவிநோதிநி" யின் நற்பெயரை இப்பத்திரிகையும் பெறத் தகுந்ததே. ஆனல், சென்ற வருஷம் ஐப்பசி மாதத்திற்குப் பிறகு இது சரிவர வெளியாகவில்லை யென் றும், பக்கங்களும் 80-போய் 64-ஆக ஆகிவிட்டதாயும் கேள்விப்பட்டேன்.

பாலசுந்தரம் :—அதுவும் உண்மை தான். அப்போது இப்பத்திரிகையின் சொந்தக்காரராக இருந்த தி. இராஜ கோபால் முதலியார் என்பவருக்கு நேர்ந்த பலவிதஎதிர்ப்பாராத சந்தர்ப் பங்களினுல் பத்திரிகையின்பக்கங்கள் குறைந்தும் காலந்தாழ்ந்தும்வெளியா கும்படி நேர்ந்தது. இப்போது அந்த முதலியார் தமதுபெயர்உட்பட "அமி ர்த குணபோதினி"யையும், அதன் அச்சுக் கூடத்தையும், அவருடைய "ஆங்கில ஆசான்" போன்ற எல்லா பதிப்புப் புஸ்தகங்களின் காபி ரைட் பாத்தியதையையும் மதுரையில் லக்ஷப் பிரபுவாகிய ஸ்ரீமான் இ.மா. கோபால கிருஷ்ணக்கோன் அவர்களுக்கு விற்று விட்டார். ஆகவே, தி. இராஜ கோபால் முதலியாருக்கும் "அமிர்த குணபோதினி"க்கும் இனி எவ்வித பாத்தியதையுமில்லை. "அமிர்த குண போதினி"க்கு நேர்ந்த இடையூறு களும் இப்போது விலகி விட்டன. பத்திரிகையின் பக்கங்களையும் சீக்கி ரம் முன்போல் 80-பக்கங்களாக்கப் போகிறார்கள். "அமிர்த குணபோ தினி"யின் ஆசிரியரும் பழங்காலத் துப் பெரியார். இப்போதைய சொந் தக்காரரான ஸ்ரீமான் இ.மா. கோபால கிருஷ்ணக்கோன் அவர்

---

சிலர் தாங்கள் பட்ட அனுபவங்களை உலகுக்கு எடுத்துக் காட்ட ஆவ லுடையவர்களா யிருந்தும், தங்களின் சுயசங்கதிகளை வெளியில் சொல்லிக் கொள்ள வெட்கி மௌனமாயிருந்துவிடுகின்றனர்.

களும் ஏரானமான பெருஞ் செல்வம் படைத்தவர். ஆகவே, இவ்விருவரும் தக்கோராக அமைந்திருக்கையில் "அமிர்த குணபோதினி"யின் அபிவிர்த்திக்கும் உன்னதத்திற்கும் கேட்பானேன்?

துளசிங்கம்:—அப்படியா சங்கதி. மதுரை ஸ்ரீமான் கோபால கிருஷ்ணக் கோன் அவர்களை வெகு காலமாக எனக்குத் தெரியுமே. அவர் மிக்க மேதாவி. மதுரை முனிசிபாலிட்டியிலும், ஜில்லா போர்டிலும் அங்கத்தினராக இருப்பதுடன், யூனிவர்ஸிடி கலாசாலையில் மெம்பராக யிருப்பதாகவும் எனக்குத் தெரியும். மகா நிர்வாக புருஷர். கீர்த்தி வந்தர். அவரது தலைமையின் கீழ் "அமிர்த குணபோதினி" நடத்தப்படுவதற்கு நான் மிக்க ஆநந்தமடைகிறேன். நானும் ஒரு சந்தாதாராகச் சேர்ந்து கொள்கிறேன்.

பாலசுந்தரம்:—நீ மட்டும் சேருவது போதாது. உனக்குத் தெரிந்தவர்களையும் சேர்த்துப் பத்திரிகையை அபிவிர்த்தி செய்யவேண்டும். ஒவ்வொருவரும் "அமிர்த குணபோதினி"யைத் தங்களின் சொந்தப் பத்திரிகையாகவும், குடும்ப சொத்தாகவும் கருதவேண்டும்.

துளசிங்கம்:—ஆகா! அப்படியே செய்கிறேன். இதை எனது கடமையாகவும், கொள்கிறேன்.

துளசிங்கம்:—தன் சொற்படியே மறுதினம் தனது சந்தாவையும், புதிய சந்தாதாரரையும் சேர்த்து "அமிர்த குணபோதினி"க்கு அனுப்பினான். கற்றாரைக் கற்றாரே காமுறுவர்.

மணிமங்கலம்—நாகபூஷணம்.



## நுனிப்புல் மேதாவிகள்!

சிலர் எந்த நூலையும் பத்திரிகையையும் சரிவர வாசிப்பதில்லை. அங்கொன்றும் இங்கொன்றும் நடுவில் ஒன்றும் பார்த்துவிட்டு அலக்ஷியத்துடன் வீசி எறிவர். இவர்கட்குத் தாங்கள்தான் பெரும் மேதாவிகள் என்று எண்ணம். பார்வைக்கோ பரம ஸாதுத்தன்மையில் வெகு வணக்கமாக நடந்துகொள்வர். அன்னோரின் உட்சுபாவமோ அகங்காரமயமா யிருக்கும். பிறரிடம் தாம் காணும் குற்றம் போலவே, தம் நூலிலும் எழுத்திலும் பிறர் காண்பரென்பதைச் சிந்திப்பதேயில்லை. எதையும் முற்றிலும் வாசிப்பது அரிது. வெளியே சிரிப்பு உள்ளே கபடம்! பேசுவதோ தித்திப்பாக! பின் நடப்பதோ கசப்பாக! நிமிஷத்திற்கு ஒரு குணம். எப்போதும் கோணல்புத்தி! அலக்ஷிய சிந்தை! இன்னோரை நம்புவது வெகு கஷ்டமாகிறது.

"இனி யிருந்து பெறும் பயனென்?"




## என் சைகிள் பைத்தியம்!



எனக்கு சைகிள் விடத் தெரிந்தது தான் தாமதம்! அதுமுதல் நான் சைகிளின் மேலே தான்! எனக்கு எத்தனையோ சைகிள் சினேகிதர்கள் உண்டு. எவராவது என் வீட்டிற்கு சைகிளில் வந்தால் அவர்கள் திரும்பும்போது வீட்டிற்கு நடந்துதான் போகவேண்டும். ஒரு சினேகிதன் தங்களிடம் சைகிள் கொஞ்சம்விட்டுப் பார்க்கிறேனென்று சொன்னால் நீங்கள் தான் கொடுக்காமல் கல் நெஞ்சமாக இருப்பீர்களோ சொல்லுங்கள். அவ்வித கல் நெஞ்சமான சினேகிதர்கள் எனக்குக் கிடைக்கவும் கிடையாது. அப்படி அவர்களுக்காக மனமில்லாமல் அவர்களும் சைகிளைக் கொடுக்க மறுத்து விட்டால் அவர்கள் எப்படியும் அவர்கள் வீட்டிற்கு சைகிளில் போகாதவாறு சைகிளை ஒரு குண்டூசியால் குத்தி சிங்காரித்து விடுவேன். இதை என் நண்பர்கள் அறிவார்களாதலின், தங்களுக்கு விருப்பமில்லாவிடினும் நான் சைகிளைக் கெடுத்துவிடாதிருப்பதற்காக என்னிடம் சைகிளைக் கொடுத்துவிடுவர். இரண்டொரு தடவை இவ்விதம் தந்து அலுத்துப் போனவர்கள் பின் என் சைகிளை என் வீட்டிற்குக் கொண்டு வருகிறார்கள்? என் வீடு ஒரு மைலானாலும் நடந்தே வந்து விடுவார்கள். சைகிளை என்னிடம் கொடுத்தால் எனக்கென்னமோ அவர்களின் சைகிளைக் கெடுக்க வேண்டுமென்ற எண்ணமே இல்லை. ஆனால், துர்அதிஷ்டவசமாக அது எப்படியோ கெட்டுப்போகிறது. நான் சைகிளில் ஏறுவது இதுவே ஆரம்பமாதலின் எனக்கு அவ்வளவாக நன்றாய் விடத்தெரியாது. மூள், கல், என்று எனக்கு வித்யாசம் கிடையாது. எல்லாவற்றிலும் எனக்கு விடத்தெரியும். ஆகவே, அதில் இரண்டு மூன்று முட்கள் ஏறி காற்று பூராவும் இறங்கினாலொழிய எனக்கும் சமாதானம் கிடையாது; சைகிளுக்கும் தொந்தரவு நிவர்த்தியாகாது. சைகிளை ஒழுங்காக சினேகிதர்களிடம் சேர்த்துவிடுவேன். என் செயல்களை யுணர்ந்த பிறகு எங்கள் வீட்டிற்கு வருவோரெல்லாம் பின்னால் சைகிளிலேயே வருவதில்லை. எனக்கும் அடிக்கடி விட இலவச சைகிள் கிடைப்பதில்லை. ஆகவே, எனக்கு இந்த சைகிள் பைத்தியமே பெரும் பைத்தியமா யிருந்தது.

°°

எல்லாருக்கும் இந்த விஷயம் எப்படித் தெரியம்? தெரியவேண்டுமென்று என்ன? தெரியாதவர்கள் என் தகப்பனாரைப் பார்ப்பதற்காக

---

ஒருவன் தான் தவறிப்போனவற்றை நூல்வழியாகச் சொல்லும்போது அதைப் படிப்போர் தாங்கள் தவறிப்போன பல அந்தரங்க சங்கதிகளையும் அந்தசமயம நினைத்துக்கொள்ளுகிறார்கள்.

சைகிளில் வருவார்கள். அப்போது தான் எனக்கும் அதிர்ஷ்டம் பிறந்து விடும்! என் தகப்பனாரிடம்போய் அவர்கள் உட்கார்ந்து பேசவேண்டியதுதான் தாமதம். நான் அவர்களின் சைகிளில் சுகமாக உட்கார்ந்துகொள்வேன். பின் வாயுவேகம் மனோ வேகமாய் பல தெருக்களில் கண்ணு மூக்குத் தெரியாமல் விட்டுக்கொண்டே போய்விடுவேன். எந்தகான்ஸ்டேபிலாவது நில் என்று சொன்னாலும் அந்தப் பேச்சைக் கேட்பதா என்று கம்பீரமாகச் சென்று விடுவேன். அப்போது அந்தப் பக்கத்திலிருந்து வரும் ரிக்ஷா வண்டியுடன் மோதுவேன். போலீஸ் என் இருகரங்களையும் பிடித்துக்கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்கிழுக்கும். உடனே, என் ஜோபியில் கையைப்போட்டு "எடுத்து" சந்தோஷப்படுத்திவிட்டுத் திரும்பவும் என் பிரயாணத்தை ஆரம்பித்து விடுவேன், பின் எனக்கே மனம் வந்ததும் வீடு வந்து சேர்வேன். அவர்களுக்கு சைகிள் நல்ல ஸ்திதியில் சேர்வது அவர்களின் அதிர்ஷ்டத்தைப் பொறுத்ததே யொழிய, என் ஜாக்கிரதையைப் பொறுத்ததில்லை.

ஃ

மற்றொரு தடவை நான் ஒருவர் சைகிளை எடுத்துக்கொண்டு புறப்பட்டு விட்டேன். அக்காலத்தில் போலீஸ்காரர்கள் ஒவ்வொரு சைகிளையும் பிடித்து லைசன்ஸ் இருக்கிறதா இல்லையா யென்று பரிசோதிக்கிறார்களென்று அறிந்திருந்தும், அதற்கு லைசன்ஸ் இல்லை யென்று எனக்குத் தெரிந்தால் அதன் மேல் எனக்கு அளவு கடந்த ஆசை யிருந்தாலும் ஒரு அங்குலமும் அதை என் நகர்த்தப் போகிறேன்? ஒரு போலீஸ்காரன் என்னைப் பிடித்து போலீஸ் ஸ்டேஷனுக்கிழுத்தான். நான் என்னிடத்திலிருந்த ஒரு ரூபாயையும் அவன் கையில் அமுக்கிப்பார்த்தேன். அதை அவன் ஜோபியில் வாங்கிப் போட்டுவிட்டு, அப்பணத்திற்கு மதிப்பு கொடுக்காமல் என்னைப் போலீஸ் ஸ்டேஷனுக்கழைத்தான். நான் ஒருவிதமான தப்பும் செய்யவில்லையே என்று பேசினாலும அந்த மஹானுபாவன் என்ன விடுகிறான்? லைசன்ஸுக்காக இழுப்பதாய் வற்புறுத்தி சைகிளைப் பிடுங்கிக் கொண்டான். அவன் பின்னாலேயே போய் எவ்வளவோ கெஞ்சித்துப் பார்த்தேன். அவன் சிறிதும் மனம் இளகாமல் ஸ்டேஷனில் சைகிளை ஒழுங்காகச் சேர்த்துவிட்டு எனக்கு ஒரு ரசீது கௌரமாகக் கொடுத்து விட்டான். மனம் நொந்து வீடு வந்து சேர்ந்தேன். என் தகப்பனார் என்னை அழைத்து அவரிடம் சைகிளைச் சேர்ப்பிக்கும்படி கூற, நான் நடந்தவற்றைச் சொல்லி விட்டேன். அப்போது சைகிள் சொந்தக்காரர் மனம் எவ்வாறிருக்கும்? அந்த நாள் சைகிள்களின் லைசென்ஸுகள் காலாவதியாகும் கடைசி நாளாகையால் அவர் மனம் மிகவும் வருந்தியது. "நான் லைசென்ஸ் வாங்காதவனானதால் எவரிடமும் சிக்கிக் கொள்ளாதிருக்க சந்து பொந்துகளி லெல்லாம் நுழைந்து திரிந்தேனே; இப்போது அவ்வளவு பாடும் வியர்த்தமாகவல்லவோ முடிந்தது" என்று வாய் விட்டு அவர் கதறியது எனக்கு சிரிப்பையே உண்டாக்கிற்று. "அதற்காக நீங்கள் கஷ்டப்பட வேண்டியதில்லை. என் மகன் செய்த தவறுக்காக நீங்

---

ஒருவன் பார்ப்பதற்கு எவ்வேலைக்கும் உதவாதவனாகத் தோற்றலாம். அவனைத் தூண்டிவிட்டால் அவனே பலரும் புகழும்படியான வேலை செய்வோனா யிருக்கலாம்.

கள் ஏன் வருந்தவேண்டும்? நானே கட்டி விடுகிறேன். இனி புதிதாகக் கட்டுவதற்கு நீங்களே கொடுத்துக் கொள்ளுங்கள் ஸார்" என்று சொன்னார் என் தகப்பனார். அப்போதுதான் எனக்கு உயிர் வந்தது. புது வருஷத்திலும் லைசன்ஸ் வாங்காமல் கழிக்கத் தீர்மானித்திருந்த அவர் மனம் என்ன பாடுதான் பட்டிருக்கும்? ஒரு தடவை அகப்பட்டு அவமானப்பட்டது போதுமென்று "நாளை அடுத்த புது வரிக்குக் கட்டவேண்டிய பணமும் அனுப்புகிறேன் ஸார்; அத்துடன் உங்கள் பணமும் சேர்த்து ஸைகிளை லைசென்சுடன் பெற்று வரும்படிச் சொல்லி விடுங்கள்" என்று கூறி விட்டு அவர் தன் வீட்டிற்குச் சென்றார்.

ஃ

மறுநாளே அவரிடமிருந்து புது வருஷ வரிக்குத் தரவேண்டிய பணம் வந்து சேர்ந்தது. அத்துடன் என் தகப்பனார் அழாத குறையாக மூன்று பிரம்ம முடிச்சுகளினால் வலியக் கட்டப்பட்டிருந்த ஒரு சிறு பையை அவிழ்த்து அதிலிருந்த பணத்தை என் முகத்தில் வீசி ஸைகிளை லைசென்சுடன் பெற்று வரும படிக் கட்டளையிட்டார். நான் கட்டளையை சிரமேற்றாங்கி போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று பணத்தைப் பூராவும் கட்டி ஒரு லைசென்ஸ் பெற்று ஸைகிளுடன் வந்தேன். இவ்வளவு கஷ்டப்பட்டும் ஸைகிளில் ஏறாமல் நான் இருப்பேனா சொல்லுங்கள். என் மனதுதான் ஒப்புமா? ஏறி உட்கார்ந்தேனோ இல்லையோ கடக், கடக் என்று ஒலமிட்டது. என்ன தவறு என்று கீழே இறங்கிப் பார்த்தேன். ஸைகிளில் காற்று கிடையாது. பக்கத்திலிருக்கிற ஒரு ஸைகிள் கடைக்கு நடத்திக் கொண்டுபோய் காற்றடித்து விட்டு அங்கேயிருந்து நகர்த்தினேன். ஸைகிள் கடைக்காரன் காற்று நிரப்பியதற்குக் காலணா கேட்டான். எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. தம்பிடியும் என் ஜோபியில் இல்லையே. நான் என்ன செய்வேன்! காலணாவிற்காக என்னை அவன் நம்புகிறானா? நான் வீடு சமீபத்தில் தான் இருக்கிறதென்று சொன்னாலும் விடுகிறானா? "சமீபத்தில் இருந்தால் ஸைகிளை இங்கேயே வைத்துவிட்டு காலணா எடுத்துக்கொண்டு வந்து கொடுத்து விட்டு எடுத்துப்போங்கள்" என்று ஸைகிளைப் பிடுங்கிக்கொண்டான். வீட்டிற்குக் காலணாவிற்காக ஓடி வந்தேன். என் தகப்பனார் வீட்டின் திண்ணையில் இருந்தார். "ஸைகிள் எங்கேடா" என்று கர்ஜித்தார். காலணா கொடுக்கும்படி கெஞ்சினேன். நடந்ததைச் சொன்னாலொழிய காலணாவும் ஏன் அவர் கொடுக்கிறார்? சொல்லி ஒழித்தேன். காலணா என் முகத்தில் வீசப்பட்டது. எடுத்துக்கொண்டு போய் கடைக்காரனிடம் கொடுத்து ஸைகிளைப் பெற்று வந்தேன். "தண்டத்திற்காக அழுததில் வட்டியாக இந்த காலணாவும் வாங்கிக்கொண்டு போனான்" என்று முணு முணுத்துக்கொண்டே ஸைகிளைப் பூட்டி விட்டு என்னை அவர் மனதுகுளிர நன்றாய் உதைத்து இனி எவர் ஸைகிளையும் நான் தொட்டாலும் சாப்பாடு கிடையாதென்று கடுமையான உத்தரவிட்டு விட்டார். அவ்வுத்தரவு எப்போது காலாவதியாகுமோ நானறியேன். உங்களிடம் ஏதாவது ஸைகிளிருந்தால் எனக்குக் கொடுக்க முடியுமா?

S. ஸ்ரீரங்க ராஜு,
"ஜெகந்நாத பாக்", சைதாபேட்டை.

[நாம் இன்னும் ஸைகிளில் ஏறிப் பழகவில்லை யானதால் நம்மிடம் எந்த ஸைகிளும் கிடையாதே என்று வருந்துகிறோம். ப-ர்.]






"அன்னம் பரிமாறுவதற்குப்பெண்களே தக்கவர்கள்; ஆடவர்கள் பரிமாற வந்து விட்டால் அது சுவைப்பதேயில்லை; உண்பவனின் மனதிற்குத் தகுந்தபடி பரிமாறவும் அவர்களுக்குத் தெரிவதில்லை. புசிப்பவனின் குணப்போக்கை யறிந்து அதற்குத் தக்கபடி பதார்த்தங்களை வைக்கவும் அறிவதில்லை. இலையில் உட்கார்ந்திருப்பவன் "போதும்" என்று சொன்னவுடன் இந்த ஆடவர்கள் அவ்வளவுடன் நின்றுவிடுகிறார்கள். வற்புறுத்தி அதிகமாக இலையில் வைத்து ஊட்டும் தாய்த்தன்மை பெண்களுக்குத் தான் பொருந்தி வரக்கூடியது. ஒரு புன்னகையுடனும், ஒரு ஆதரவான அன்புடனும், ஒரு அழகும் கௌரவமும் வாய்ந்த மனோகரமான தோற்றத்தினோடும் பெண்மணிகள் எதிரில்நின்று அன்னம் படைக்கும்போது அதை யுண்பவனின் உள்ளம் விஸ்வாசத்தாலும் வணக்கத்துடன் கூடிய புளகாங்கிதத்தாலும் பூரித்துப்போய் இலையிலுள்ளதை மிக்க வாஞ்சையோடும் திருப்தியாய்ப் புசிக்கிறான். எதிரில் நிற்கும் பெண் தெய்வம் மேலும் வைப்பதற்கு வர, போது மென்று எவ்வளவோ கெஞ்சி வேண்டிக்கொண்டு, குறித்த அளவுக்கு அதிகமாகவே புசித்து விட்டு எழுந்திருக்கிறான். அந்த மகராஜியால் என் வயிறு பெரிதாய்ப் போய் விட்டது என்கிறான். இவ்விதமாக ஆடவர்கள் பரிமாறி உபசரிக்க முடியுமா? ஆண்கட்டைகள் இந்த வேலைக்குப் பிறந்தவர்களல்ல. பெண்ணுருவங்களே பூரிப்போடும் இவ்வேலையைச் செய்யத்தக்கவர்களாவார்" என்றார் சாப்பாட்டு ராமப்பெருமான்.

ஃ

உடனே, ருசி பார்த்துண்ணும் ருத்திர மூர்த்தியார் எழுந்தார். "இந்த ஆடவர்களின் கையில் புசித்து சில தடவைகளில் அரைவயிற்றுடனும் இருந்திருக்கிறேன். அவர்கள் மீது கோபித்துப் பயனில்லை. ஒருவன் எவ்வளவு புசிக்கக் கூடுமென்ற விவரமே அவகர்ளுக்குத்தெரிவதில்லை. இலையில் உட்கார்ந்த பின்பு அன்னம் போட வருகிறார்கள். அதில் பாதி இலையிலும், மறுபாதி தரையிலும் விழுகிறது. ஒருவர் புசிக்கவருமுன்பேஇலையில் அன்னம் படைத்து, அதிலும் அதிகமாகவே வைத்துக் கையால் பிடித்துச் சேர்த்துச் சிறிதே இட்டிருப்பதுபோல் தோற்றச் செய்யும் பக்குவம் பெண்ணுருவங்களின் கைக்கேதான் வரும். இலையில் உட்கார்ந்தபின் அன்னம் பரிமாறுவதென்பது மறுசாதம் வைக்கவரும் இரண்டாவது முறையாக இருக்கவேண்டுமே தவிர, முதல் முறையாக இருக்கக் கூடாது. அதாவது, ஒருவன் புசிப்பதற்கு உட்காரு முன்னதாகவே இலையில் அன்னம் படைத்திருக்க வேண்டும். பெண்களுக்கு ஊட்டும் கை; ஆடவர்கட்கு சம்பாதிக்கும் கை" என்றார்.

ஃ

"கஷ்டப்பட்டுச் சமைப்பது பெரிதல்ல; மற்றவர்கள் ஆவலோடும் உண்ணும்படி அத்தனை பக்குவமாய்

ருசிகரமாய்ச் சாப்பாடு இருக்கவேண்டும். அத்துடன் உண்ணுபவரும் பிரியமாய் வயிறு நிறையைப் புசிக்கும்படி இடவேண்டும். இவ்விதமே ஒருவன் வருந்திச் செய்கிற வேலையும் பிறர் சிலாகிக்கும் வண்ணம் அமைய வேண்டும். அதுதான் கடினமான சங்கதி'' என்று ஆமவடைப் பண்டாரம் பகர்ந்தார்.

ஃ

"முதல் மனைவியால் ஊட்டப் பெற்றுச் சுவைத்தவர்களுக்கு, அவள் காலமாகி இரண்டாவதாக வந்தவள் பரிமாறும்போது முந்திய முதல் கையின் ருசிபோல் இந்த இரண்டாவது தாரம் இடுவதின் ருசி இருப்பதில்லை யென்றும், அவளைப்போல என் மனமறிந்து செய்து வைக்கும் குணம் இவளுக்கு வருமா என்றும் முன்னவளை நினைத்து வாயூறுவார்களென்றும்'' தாண்டவக்கோன் சாற்றினர்.

ஃ

"பெற்ற தாயைவிட, வளர்த்த அத்தை பாட்டிகளுக்கே விதம் விதமாக ஊட்டுவதில் அதிகம் சிரத்தையிருக்கும். அவர்கள் கவனித்துக் கொள்ளும்போது எனக்கென்ன என்று தாயார் ஒதுங்கி யிருப்பதே தவிர, பெற்ற தாயின் பாசம் ஒரு பக்கம் இருந்து கொண்டேதான் இருக்கும்'' என்று அல்லா பிச்சை பேசினர்.

ஃ

"பம்பாயிலிருந்த ஒரு பெண் தன் குமார்த்தியுடன் அநேக வருஷங்கட்குப் பிறகு திருநெல்வேலியில் தன் தமக்கை வீட்டுக்குச் சென்றிருந்தாள். அந்தத் தமக்கை தன் தங்கையின் பெண்ணிடத்து விசேஷித்த அன்பு காண்பித்து வெகு பிரியமாக இலையில் அன்னம்படைத்துத் தன் கைகளாலேயே ஊட்டி, பிறகு அந்த இலையிலேயே தானும் உண்டு எழுந்தாள். இதைக் கண்ட சிறுமி தன் பெரிய தாயின் அன்பைத் தன் அன்னையிடம் கூறி, இவ்வளவுஅன்பு எங்கும் கண்டதில்லை, உன்னிடத்தில் கூடக் காணவில்லை என்றாள். அதற்கு அந்த அம்மை சிரித்துக்கொண்டு, குழந்தாய், எனக்கு மகப்பேறில்லாததால் என் தமக்கையின் குழந்தையான உன்னைக்கைக்குழந்தையிலேயே எடுத்துச்சென்று வளர்த்தேன். உன் தாய் என் தமக்கையே தவிர நான் அல்ல; ஆனதால்தான் தாயின் பிரியத்தைக் காட்டி உனக்கு ஊட்டினள் என்று கூற, இதைச் சிறுமி நம்பவேயில்லை. பிறகு இது உண்மையே என்று அறிந்தபோது ஆச்சரியமடைந்தாள்'' என்று கோணித் தேவர் இயம்பினர்.

ஃ

"தாயினுடைய அன்பை சில நண்பர்களின் மனைவிமார் காட்டுகிறார்களென்றும், நண்பன் இல்லாத காலத்துங்கூட அங்குசென்று வயிறாறப் புசித்துப்போகும் வண்ணமாய் அவ்வளவுக்குச் சேர்த்து ஆதரிக்கிறார்களென்றும், இதனல் நண்பர்களிடம் அதிகமாக நெருங்கிச் சேர்ந்து நேசத்தைப் பெருக்கிக்கொள்ள முடிகிறதென்றும், அத்தகைய உத்தமிகள் இனிது வாழக்கடவராக'' என்றும் விசுவாசம் பிள்ளை புகன்றார்.

ஃ

---

ஒருவன் ஒரு பெண்ணை வசப்படுத்திவிட நினைக்கிறான். அப்பெண்ணோ அந்த ஈனச்செயலுக்குத்தான் இணங்குகிறவளல்லவென்று வெறுப்பு முகமாய்த் தன் நடத்தையால் காட்டுகிறாள். இவனும் அது உணர்ந்து அவளிடம் யோக்கியமான மனிதனாக நடந்துகொள்ள ஆரம்பிக்கிறான். பிறர் கெடுவதும், நல்லோராவதும் தன்னாலேயே. தன் குணத்தாலேயே.

"சிலர் தங்கள் இல்லங்களில் இருவேளைப் புசிப்புக்குத் தானம் போட்டுக்கொண்டிருந்தாலும், தாங்கள் போகும் இடங்களிலோ புது மாப்பிள்ளைகளுக்கு மரியாதை நடப்பது போல் நடக்கவேண்டுமென்கிறார்கள். மாலை மணி நான்கானதும் 'ஏன் இன்னும் காபி வரவில்லை' என்று ஆரவாரிக்கிறார்கள். அவர்கள் வீட்டில் மாலையில் காபி வைப்பதே கிடையாதானாலும், வெளியிடங்களில் காட்டுகிற டம்பத்துக்குக் குறைவில்லை" என்று இஞ்சிபச்சடியார் நவின்றார். அதற்குத் தொந்திசெட்டியார், ஏனோ அவர்கள் வீட்டில் அப்படி நடவாவிட்டாலும், நமது வீட்டு ஞாபகம் அவர்களுக்கு என்றைக்கும் இருக்கும்படி திருப்தியாக அவர்கள் விரும்பின விதமாகவெல்லாம் உபசரித்து அனுப்புவதே மேல். இல்லாதவர்களுக்குத் தான் எப்போதும் இடவேண்டும். அதை ஒரு அருமையாகவும் விசுவாசத்தோடும் மதிப்பார்கள் என்றார்.

ஃ

"அது சரி; ஆனால், சிலருடைய அன்னத்திலே ஒருவித தோஷம் ஒட்டிக்கொண்டிருக்கின்றது. எவரெவர் அவர்களுடைய அன்னத்தைப் புசித்தார்களோ—அத்தனை பேரும் பெரிய சத்துராதிகளாயும் துரோகிகளாயும் உண்ட வீட்டுக்கே இரண்டகம் நினைப்போராயும் முடிகிறார்களே! இதற்கென்ன செய்வது?" என்று தாண்டவக்கோன் கேட்க, அதற்கு அல்லாபிச்சை "அந்த நன்றிகெட்ட பாவத்தை அவர்களே அனுபவித்துக் கொள்ளட்டுமென்றுவிட்டுவிட்டு, நாம் மனதார உபசரித்த சந்தோஷத்தோடும் திருப்திபட்டுக்கொள்வோம்" என்றார். இவ்வளவுடன் நமது கடையும் பூர்த்தியானது.

'பஹதூர்' பொன்வண்டுசெட்டியார்

## முதலிலேயே உன் தவறைத் திருத்துக.

தான் மற்றவர்கள் விஷயத்தில் சிரத்தையுடனிருக்கவில்லை யென்கிற அபிப்பிராயம் ஏற்பட்டுவிடும்படி நடப்பது சரியாகாது. தான் சுயநலஸ்தனென்றும், தன் காரியத்தைமட்டுமே கவனித்துக்கொள்பவனென்றும் பிறர் சொல்லும்படியான தன்மையில் அந்தப் பேச்சை வளரவிட்டுவைப்பதும் புத்திசாலித்தனமல்ல. தன்னைப்பற்றிப் பிறர் ஒரு முடிவான தீர்மானத்திற்கு வந்துவிட்ட பிறகு அவர்களின் மனதில் ஊன்றிப்போயிருக்கும் கெட்ட அபிப்பிராயத்தைப் பிறகு தான் எத்தனை நற்செய்கைகள் செய்தாலும் மாற்றுவது சாத்தியமில்லாததாகிவிடும்.

பிறரைக் கெட்டவர்களாக்குவதும் நலலவர்களாக்குவதும் நாம்தான். பிறருடைய தீய செய்கைக்கு நாம் இணங்க முடியாதென்ற நமது உறுதி நெஞ்சை அவர்கள் அறியும்படி செய்துவிட்டால், பிறகு அவர்களும் நம்மை தீயதன்மைக்கு அழைக்காமல் நல்ல மனிதர்களாகவே நடந்துகொள்ளப் பழகிவிடுகிறார்கள். எல்லாம் நாம் நடக்கும் மாதிரியிலிருக்கிறது.




(255-ம் பக்கத் தொடர்ச்சி.)



## லாங்பெலோவின் மொழிகள்.

818. Go forth to meet the shadowy future without fear, and with a manly heart.

நிச்சயமற்ற எதிர்காலத்தைச் சந்தித்திடப் பயமின்றித் துணிகரமான இருதயத்தோடும் முன்னே செல்.

819. Greater than anger is love, and subdueth!

கோபத்திலும் சிறந்தது அன்பாகும்; அதுவே (எதையும்) சாதுவாக்கும்.

820. Faith is the sun of life; and her countenance shines like the hebrew's, for she has looked upon god.

நம்பிக்கை என்பது வாழ்க்கையின் ஊன்றுகோல்; அது கடவுளைச் சார்ந்து நிற்பதால் வன்மை வாய்ந்ததாக இருக்கிறது.

821. Affection never was wasted; if it enrich not the heart of another, its waters, returning back to their springs, like the rain, shall fill them full of refreshment.

அன்பு எக்காலத்தும் வீணாகப் போனதில்லை. அது மற்றவர்களுடைய இருதயத்தில் ததும்பி நிற்காவிடினும், மழையைப்போல் உதயமான மனதையே அடைந்து, அதைச் சந்தோஷப்படுத்துகிறது.

822. For the structure that we raise, time is with materials filled; our to-days and yesterdays are the blocks with which we build

நாம் கட்டும் (வாழ்வென்னும்) பெரிய கட்டிடத்திற்கு 'காலம்' மூல வஸ்துவாக இருக்கிறது. நமக்கு இன்றும் நேற்றும் நடந்த விஷயங்கள் நம்முடைய கட்டிடத்தைக் கட்டுவதற்குக் கற்களாக அமைகின்றன.

823. Serve yourself, would you be well served, is an excellent adage.

உனக்காகவே நீ உழை. அவ்வாறு நன்றாக உழைத்தால் அது சிறந்ததொரு நீதிமார்க்கமாகும்.

824. The will of heaven my will shall be,—I bow to the divine decree, to god's behest.

கடவுளுடைய இஷ்டம் எதுவோ அதுவே என்னுடையது. தெய்வீக விதிக்கும் கடவுளுடைய கட்டளைக்கும் நான் வணங்குகிறேன்.

825. Honour to those whose words or deeds thus help us in our daily needs; and by their overflow raise us from what is low;

நமக்குப் பிரதிதினத்திற்கும் வேண்டியதாக இருப்பதற்கு எவர்கள் உதவி

செய்கிறார்களோ அவர்களுக்கு நீ பெருமை செய். அவ்வுதவி சொல்லாலேயோ அல்லது செய்கையாலேயோ இருந்தாலும் இருக்கட்டும். அவ்வுதவிகளின் பிரவாகம் நாம் எதில் தாழ்வுற்றிருக்கிறேமோ, அதினின்றும் விடுவித்து உன்னதநிலைக்குக் கொண்டு செல்லும்.

826. Memory brightness o'er the past, as when the sun, concealed behind some cloud that near us hangs, shines on a distant field.

சூரியன் மேகத்தில் மறைந்திருக்கும்போது தூரத்திலுள்ள நிலத்தில் பிரகாசிப்பதுபோல், ஞாபகம் பழைய விஷயங்களைத் துலக்கிப் பிரகாசிக்கச் செய்கிறது.

827. The life of man upon this fair earth is made up, for the most part, of little pains and little pleasures.

இந்த அழகிய உலகத்தில் மனிதனுடைய வாழ்நாள் அனேகமாக சிறு துன்பங்களாலும், சிறு சந்தோஷத்தாலும் உண்டாக்கப்பட்டிருக்கிறது.

828. All are architects of fate, working in these walls of time: some with massive deeds and great, some with ornaments of rhyme.

'காலம்' என்னும் கோட்டைக்குள்ளே எல்லாரும் விதியை உண்டாக்கும் சிற்பிகளாக இருக்கின்றனர். சிலர் ஆகும் பெரும் காரியத்தையும், வேறு சிலர் புகழை உண்டாக்கும் காரியத்தையும் செய்கின்றனர்.

829. Prayer is innocence' friend; and willingly flieth incessant twixt the earth and the sky, the carrier-pigeon of heaven.

கடவுளைப் பிரார்த்திப்பது மாசற்றவனுக்குத் துணையாகும். அது விஷயத்தைக் கொண்டு செல்லும் தேவலோகப் புறா ஆகாயத்திற்கும் மண்ணுலகத்திற்கும் அடிக்கடி மனமுவப்போடு பறந்துசெல்லும்.

830. Our thoughts are free, they cannot be shut up.

நம்முடைய எண்ணங்கள் சுயேச்சையுடையன. அவைகளைத் தடுக்க முடியுமா ?

831. Think of thy brother no ill, but throw a veil over his failings, guide the erring aright.

உன்னுடைய சகோதரனுக்குக் கெடுதல் செய்ய நினைக்காதே. அவன் செய்யத் தவறியவற்றை மறந்துவிட்டு, தவறைத் திருத்து.

832. The intellect is finite; but the affections are infinite, and cannot be exhausted.

அறிவு முடிவுள்ளது; ஆனால் அன்பு எல்லையற்றது. ஆகையால் அதைச் செலவிட்டுவிட முடியாது.

833. So long as you are innocent, fear nothing, no one can harm you;

நீ மாசற்றவனாக இருக்கும்வரையில் யாதொன்றுக்கும் பயப்படாதே. உன்னை யாரும் துன்பப்படுத்த முடியாது. P. G. குலசேகரன்.

---

முதலில் கெட்டுவிட்டது தற்செயலாக நேர்ந்ததா யிருக்கலாம். அது குற்றமானாலும் அந்த அனுபவத்தைச் சொல்வது தாழ்வாகாது. பிறகு தவறுமலிருக்கப் பார்ப்பதே மேலான சாமர்த்தியமாகும்.

விவேகம்
விநோதம்
விசித்திரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரியம்
ஆநந்தம்

# ஆச்சு! போச்சு! குடு! குடு! குடு!



## குடு! குடு! குடு! குடு! குடு! குடு!

இந்த வீட்டிலே ஜெயம் பிறக்குது! ஜெயம் பிறக்குது! ஐயாவுக்கு க்ஷேமமாகுது! ஆகுது! குடு! குடு! ஐசுவரியம் பொங்கப்போகுது! குடு! குடு! கப்பலிலிருந்து சேதி வருகுது! குடு! குடு! கனத்த லாபம் காணப்போகுது! குடு குடு! மருமகன் வரப்போகிறான்! ஆண் குழந்தை பிறக்கப்போகுது! குடு குடு! மலையாளபகவதி பேசுது! புதையல் பொக்கிஷம் கிடைக்கப்போகுது! குடு குடு! வீட்டு ராஜாத்தி கழுத்திலே முப்பது பவுன் கடியாரகொலுசு ஏறப்போகுது! குடு குடு! வீடுமனை—தோட்டம் வயல்—மாடு குதிரை வாங்கப்போகிறாங்கோ! குடு குடு! போனுக்குப் பேரனைப்பார்க்கப் போகிறாங்கோ! விகடனுக்கு நல்ல துணிவாங்கித் தருவாங்கோ! சொக்கா தருவாங்கோ! பணத்தை அள்ளி அள்ளிக்கொடுப்பாங்கோ! குடு குடு

ஃ

ஊரிலே பொருளாதாரக் கஷ்டம் என்கிறாங்கோ! பணத்துக்கு ரொம்ப நெருக்கடி என்கிறாங்கோ! அதுவும் ஒரு பக்கம் உண்மையாகத் தானிருக்குங்கோ! ஆனாலோ, மோட்டாருக்குக் குறைச்சலா?—நாடகம், சினிமாவுக்குக் குறைச்சலா?—காப்பி ஹோட்டலிலே மூக்கு வரை இழுப்பதிலே குறைச்சலா?—வீட்டுச் செலவுகளிலே குறைச்சலா?—துணி மணி பட்டு சிங்காரங்களிலே குறைச்சலா?—புது புது பூஷணங்கள் பூணுவதிலே குறைச்சலா?—எதிலே குறைச்சல் அண்ணேன்! நல்ல செலவுகள் செய்வதிலே குறைச்சலடா தம்பி! மற்ற வீண் விரயச் செலவுகளிலே என்ன குறைச்சல்! குடு குடு குடு!

ஃ

உத்தியோகம் கிடைக்காதவனுக்கோ தான் படித்த உற்சாகம் போச்சு! வேலை ஆனவனுக்கோ கொண்டாட்டம் ஆச்சு! அவனிடத்திலே புது வேலை கேட்க வருகிறவனையோ—இல்லை—போ—என்று நாற்காலியிலே சாய்ந்தபடி பேசுகிறான். முன்பு தான் வேலையில்லாது ஏங்கித் திரிந்ததை மறந்து விடுகிறான்! உத்தியோகம் கிடைத்தவன் பாஷா! அது கிட்டாதவனே பக்கிரி! குடு குடு! குடு! சென்

னைப் பக்கத்திலே படித்த சர்வ கலா சாலைப் பட்டதாரிக்கு மார்க்கட் விலை 20-ரூபாய்! கல்கத்தா, பம்பாய் ஸர்வ கலாசாலைப் பட்டதாரிகளுக்கு 25—ரூபாய் சம்பள மதிப்பு! இது என்ன படிப்பு? மண்ணாங்கட்டிப் படிப்பு! எந்தப் படிப்பும் படிக்காமலே எத்தனையோ வியாபாரிகள் எவ்வளவோ சம்பாதித்துப் பணமூட்டை கட்டுறாங்கோ! பம்பாயிலே மார்வாரிகள் பல லக்ஷங்களுக்குக் கொழுத்துப் புஷ்டித்த புண்ணியவான்கள்! அவர்களுக்குக் கையெழுத்தே போடவராதாம்! படிக்காதவனைவிட படித்தவன் வாழ்வு உயர்ந்திருக்க வேண்டாமா? அது காணுமே! ஒரு வரிக்குப் பத்து எழுத்துத் தப்பு எழுதுகிறவன் எஜமானனாய்ப் போகிறான்! எல்லாம் நல்லாப் படித்தவன் அவன் கீழே வேலைக்காரனாகப் போகிறானே! அட கண்றாவியே! குடு குடு!

ஃ

பழய நாளிலே 1904-ம் வருஷத்துத் தேசபக்தரு ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளை! அந்தக்காலத்தில் சுதேசி கப்பல் கம்பெனி ஏற்படுத்தின பெரியார்; சிறைவாசம் கண்டு, அங்கே செக்கு இழுத்து மிக்க அவதியுற்றவர்; தமிழில் வல்லவர்; பல நூல்களின் ஆசிரியர்; நன்றாகஉயர்ந்து வளர்ந்தவர், நல்ல தேகக்கட்டுள்ளவர். அவருக்குத் தாதா வயது ஆகிப்போய் இந்த ஆவணியிலே சஷ்டி பூர்த்திக் கல்யாணம் நடக்கப் போவதில் தமிழ்ச் செல்வர்கள் ஒரு பெரிய பணமுடிப்பு கொடுக்கப் போகிறாங்கோ! குடு குடு குடு! அவருக்கு விகடன் பல்லாண்டு வாழி கூறுகிறேன்! குடு குடு!

ஃ

லண்டன் வட்டமேஜை மகா நாடு மூன்றாவதாயொன்று வரப்போகுதாம்! நம்ம மிதவாதிகளுக்கு இது ஸந்தோஷ சங்கதி! குடு குடு! இந்தியர்களும் கவர்னர்கள் ஆகிறாங்கோ! முன்னே பீஹார் ஒரிசா கவர்னராக S. P. ஸிம்ஹா ஆனாரு! இப்போ பஞ்சாப் கவர்னராக ஒரு மூஸ்லிம் அய்யா வருகிறாரு! காப்டன் சர்தார் சிகந்தர் ஹயத்கான் என்று அவர் பேரு! நன்றாகச் சம்பாதித்துத் தின்று நெடுநாள் வாழட்டுமென்று விகடன் வாழ்த்துகிறேன்! குடு குடு! குடு!

ஃ

இனி ஊர்உள்ளசங்கதி, முன்னே பின்னே மாறிக்கெட்டு நாறுகிற சங்கதி இதுகளை விகடன் கொஞ்சம் படித்து முடிக்கிறேன். ஓ! என் நஞ்சான் குஞ்சான்களே! பாட்டன் பாட்டி—பேரன்—பேர்த்திகளே! உங்கள் தாதாக்களின் காலங்களிலே நீங்கள் இருந்த சிக்கனமென்ன, சீரென்ன, இப்போதிருக்கும் ஒய்யாரப் பிழைப்பென்ன! ஓட்டை வாழ்வென்ன! ஆதியிலே நம்ம பாட்டிகள் நாலு ரூபா புடவைக்குமேல் கட்டவில்லை! இப்போது சாதாரண ஸ்திரீயும் நகைகளை யாவது விற்று, நாற்பது ஐம்பது ரூபாயுள்ள சேலைகள் கட்டலாச்சு! அது மட்டுமோ? அடேயப்பா! எவ்வளவு ஒய்யாரமினுக்கு தளுக்குகள்! சேலையின் நுனி சொருகுவது போய் காற்றிலே ஊஞ்சலாடுது! உடம்பெல்லாம் தெரியுது! எவ்வளவுக்கு மேலே எல்லாம் தெரிய உடுக்கிறார்களோ அவ்வளவுக்கு நாகரீகமாம்! இனி போச்சுது எதுவென்றாலே வீட்டிலேயுள்ள சட்டி பானைகள்தான்! இப்போது எனமல், பீங்கான், அலுமினியம் இப்படி மாறிப்போச்சு! ஸ்திரீகள் போடும் சொகுசு கொண்டைகளெல்லாம் மாறி விதம் விதமான கொண்டைகளாச்சு! மூக்கில் போடும் புல்லாக்கு மூக்குத்திபோய் ஒரு திருகாணியில் முடியலாச்சு! காதில்

போடும் கத்திரி பாவிலி, குருட்டு பாவிலி, ஜிமிக்கி, மாட்டி யெல்லாம் போய் ஒரு தோடில் முடியலாச்சு! கடியாரக் கம்பல் ஓடிப்போச்சு ! சுமங்கலியம்மா தான் போட வேணு மென்ற காசுமாலை பறந்து போச்சு! அமங்கலியாத்தாளும், சுமங்கலிப் பெண்ணும் இருவருக்கும் உதவும்படி செயின் — கடியார கொலுசாச்சு ! காலுக்கு அணியும்வேலங்காகொலுசு, பட்டை கொலுசு, எல்லாம் போய் பூட்ஸு காலாச்சு? தலைக்கோ பழய பெரிய ஜடைபில்லை போய், நாகர் பில்லையும் போய், கெம்பு ரவை பில்லை களாச்சு! கைக்கோ கரிவளையல், அரக்கு வளையல், பட்டைக்காப்பு எல்லாம் போய் என்னென்னமோ கம்பி பம்பாய் வளையலாச்சு ! கடைசிலே நடக்கிற சங்கதி என்ன தெரியுமா? எல்லா நகையும் கால கஷ்டத்தாலே அடிக்கடி பாங்கியிலே அடகுக்கு ஓடிப் போகிறதாச்சு! பவுன்விலை இப்போது 18-ரூபாயானாலும், பாங்கியில் அதற்குப் போடுகிற மதிப்பு 10—9-க்குத் தான் ! குடு குடு !

ஃ

களிமொத்தையுண்டவர்கள் காப்பி குடிக்கலாச்சு! "காபி சாப்பிட்டுப் போங்களேன்" என்கிற உபசாரமாச்சு! பழய சோறு, அதில் ஊற்றின நீரு, அதன் உயர்ந்த குணம் இந்தப் புதுத் தரைமன்னர்கட்குத் தெரிகிறதா! என்னவோ கௌரவமென்று எல்லோரும் காபி—டீ—ஆரம்பித்து விட்டு மெலிந்து போகிறுங்கோ! சிகைத் தலையர்களெல்லாம் கிராப் தலைகளாச்சு! காபிக்கடைகள் எவரும் பழிக்காத கள்ளுக்கடைகளாச்சு! சத்தியம், உறுதிவார்த்தை சாம்பலாச்சு! நம்பிக்கையோ திருட்டு நம்பிக்கையாச்சு! எண்ணங்களெல்லாம் திருட்டு எண்ணங்களாச்சு! மாமி மருமகள் சரி சமானமாச்சு! பெண்ஜாதிக்குப் புருஷன் ஏவலாளாச்சு! சிறிதுகள் எல்லாம் பெரிதுகளாச்சு! மட்டுமரியாதை மாயமாய்ப்போச்சு! வாயாடி வம்பருக்குக் காலமாச்சு! பூமியோ சாரமற்றுப் போச்சு! மூலிகைகளும் முறுக்கும் சத்தும்இல்லாமற்போச்சு பெரியகுடும்பங்களிலே சந்தானமற்றுப் போச்சு! பிறக்கிறதெல்லாம் பெண் குட்டிகளாச்சு! அற்பர்களெல்லாம் அதிகாரம் படைக்கலாச்சு! நேற்று முளைத்தவர்கள் பெரிய பருப்புகளாகிக் கண்டபடி பேசலாச்சு! குடு குடு !

ஃ

இலைகளில் தின்றவர்களெல்லாம் மேஜையின்மீது தின்பதாச்சு! வீட்டில் செய்யும் தினபூஜைகள் எல்லாம் சுத்த பைத்தியம்—நான்சென்ஸ் என்னலாச்சு! திதி, யோகம், வாரம் பார்த்து க்ஷவரம் செய்துகொண்டதெல்லாம் போச்சு! நினைத்தபடி க்ஷவரம் நடக்கலாச்சு! குலம் ஆசாரம் எல்லாம் போச்சு! கண்ட கண்ட ஜாதியாருடன் வித்தியாசம் இன்றிக் கைகோர்த்துக்கொண்டு திரியலாச்சு! எவன் பணக்காரனே அவன் நல்ல ஜாதி, எவன் வயிறு காய்ந்தவனே அவன் தாழ்ந்தஜாதி என்னலாச்சு! எவன் எவனே எப்படி எப்படியோ கசுமாலக் கையோடும் தொட்டு ஊற்றிய தண்ணீருள்ள சோடா லெம்னெட் புட்டிகளைப் பார்ப்பார் முதலாக

---

உன் உறுதிக்குத் தகுந்தபடியே காரியத்தின் முடிவும் இருக்கும். நீ விடாது பின்தொடர்பவனென்றும், மிக்க முறண்டுநிற்பவனென்றும், உன்னால் தன் மானம் கெட்டுவிடுமென்றும் ஒருவன் உணருகிறபோது உன்னை எமாற்ற நினைத்த கருத்தை அவன் விட்டுவிடுகிறுன். உனக்கு உட்படிந்தும் போகிறுன்.

எல்லாருமே வாயில்வைத்து உறிஞ்சலாச்சு! காலை—மத்தியானம்—சாயங்காலம் பிராமணர்கள் செய்யவேண்டிய சந்தியாவந்தனாதிகள் எல்லாம் சொர்க்கலோகம் சேரலாச்சு! அதற்குப் பதிலாக மோட்டார் சவாரி—பந்தடித்தல்—சினிமா என்பதாச்சு! பிராமணர்கள் தரித்துக்கொள்ளும் கையில் நூற்ற பஞ்சுநூல் பூணூல்கள் எல்லாம் பறந்துபோச்சு! எல்லாமே மில்-மிஷின் நூலாச்சு! சிரார்த்ததினமன்று கர்த்தா க்ஷவரம் முதலானது செய்துகொள்ளாமலும், ஒருவேளையே புசிக்கவேணுமென்பதும்போய் கன்னு பின்னு ஆச்சு! மூணுவேளை விழுங்கலாச்சு! விரதநாளில் பட்டினிகிடப்பதுபோய் நன்றாக அன்றுதான் பலகார பக்ஷணமாய் பழுக்கப் பார்ப்பதாச்சு! ஆசைக்கும் அன்புக்கும் அழுது துடிக்காமல், வீணுக்கும், ஊர்மெச்சுகிறதற்கும் மாரடித்துப் புலம்பலாச்சு! பாழான உத்தியோக ஆசையால் உருவமே மாற்றிக்கொள்ளலாச்சு! எங்கும் ஒட்டாண்டிகளாய்க் கடன்பட்ட கண்ராவிகளாச்சு! இனியாவது விழித்துக்கொள்ள முடியுமா? பழயதிலும் புதியதிலும் நல்லதைப்பொறுக்கி ஒரு ஒழுங்குக்கு வரக்கூடாதா? கொஞ்சம் மூக்கி மூக்கிப் பாருங்களேன்! இப்போது காணுகிற புதிய நாகரீகங்களிலே மனோ வுறுதியும் சன்மார்க்கமும் குலைந்துபோகின்றனவே! ஏதோ விகடன் சொல்லிப் போட்டேன்! கேட்டால் கேளுங்கள்! கேட்காமற் போனால் போங்கள்! குடு குடு குடு குடு குடு! ராம்! ராம்! சுபம்! சு! சுவாஹா!!

## கறிவேப்பிலையிலிருந்து ஒரு குறிப்பு.



சமையல் வகையில் கறிவேப்பிலை ஒரு முக்கிய வஸ்து. அது சமையலுக்கு நல்ல மணத்தையும் ருசிகரத்தையும் கொடுக்கிறது. ஆனால் புசிக்கும்போது, அன்னம், குழம்பு இவற்றுடன் வயிற்றுக்குட் செல்லாமல் வெளியிலேயே தங்கிவிடுகிறது. இவ்விதமே, சில நண்பர்கள் தங்களாலான உதவியைச் செய்துவிட்டுப் பிறகு தூர இருந்துகொள்கிறார்கள். கறிவேப்பிலையை மருந்தாக உபயோகிக்கையில் அதை அரைத்து வயிற்றுக்குள் போகச் செய்கிறார்கள். இவ்விதமே அதிக கஷ்டம் நேரும்பொழுது உத்தம நண்பர்கள் முன்போல் தூரத்திலிருந்துகொள்ளாமல் வீட்டுக்குள்ளும் வந்து உட்கார்ந்துகொண்டு தங்களாலான சகாயங்களெல்லாம் செய்து கஷ்டத்தை நிவர்த்திக்கிறார்கள். சிலர் பிறரால் தங்கட்கு ஆகவேண்டிய காரியமானவுடன் மெதுவாக அவர்களை ஒதுக்கிவிடுவதுண்டு. அது கறிவேப்பிலையைச் சேர்த்துச் சமைத்தபின் அதை இனி தேவையில்லையென்று குழம்பிலிருந்து எடுத்துக் கீழே எறிந்துவிடுவதுபோலாம்.




மாமிக்கும் மருமகனுக்கும் பிறந்த குழந்தைக்கு என்ன முறை வைத் தழைப்பது என்று விகடபுராணிகர் கேட்கிறார்!

ஃ

அவனைப் பலகப்பதெல்லாம் அவனிடம் தான் முன்பு கற்பழிந்ததை எங்கு வெளியிட்டுவிடுகிறானோ என்ற பயத்தினால்தானாம்!

ஃ

காதலின் முதற் பகுதி காமம், பொழுதிலொரு காற்பங்கு சாமம், வைணவர்கள் அணிவது நாமம், வைதீகர் எரிக்கும் தீ ஓமம்!

ஃ

தாரம் இரண்டுடையார்க்கு யம வாதை பெரிதாகுமா? மானம் இழந்த வர்க்கு லஜ்ஜை பெரிதாமா? கேடு கெட்ட சூதர்க்கு சத்தியம் பெரி தாமா? மதுபானம் செய்வோருக்கு மனைவிமக்கள் அபிமானம் பெரிதாமா? ஆசாரமற்றவர்க்கு சாஸ்திரம் பெரி தாமா?

ஃ

வெளி ஆடம்பரத்துக்குத் தக்க படி உள்ளுக்கு சமையல் இல்லையாம்!

ஃ

நாவிதனிடம் பலதினுசு கத் திகள் இருப்பதுபோல், ஆசிரியர்க ளிடமும் பவுண்டன்பேனா, மை தொட்டு எழுதும் பேனா, காகித பென்சல், காபிங் பென்சல், புளூ பென்சல் முதலிய பல தினுசுகள் இருக்கின்றனவாம்!

ஃ

மூக்காலணா விளக்கெண்ணெய் புசித்து, இரண்டு அணா இட்டிலியை உடனே வயிற்றுக்குள் தள்ளினால் நன்றாகப் பேதியாகுமாம்!

ஃ

மகாத்மாவுக்கு ஆகந்த அதிர்ஷ்ட ஜெய தாயத்தைக் கட்டினால் உடனே விடுதலையாவாரென்று விகட ஜோசி யர் கூறுகிறாராம்!

ஃ

தலைப்பாகையின் கனத்துக்குத் தக்கபடி சம்பளமும் புத்தியும் காணு மாம்!

ஃ

வீதிகளின் நடுவிலே கைவீசி நடக்க மோட்டார்களும் பஸ்களும் இன்னும் அதிகமாக வேணுமாம்!

ஃ

என் மருமகனுக்கு உன் ஆபீ ஸிலே வேலை கொடு, உன் மருமக னுக்கு என் ஆபீஸிலே வேலை தருகி றேன். அப்படிச் செய்தால் இருவ ருக்கும் வெளியில் கெட்ட பேர் வராது என்று இரு உத்தியோகஸ்தர் களும் பேசிக்கொண்டார்களாம்!

ஃ

கால்நடை போய் மாட்டுவண்டி வந்தது டம் டம்! மாட்டு வண்டி போய் குதிரை வண்டி வந்தது டம் டம்! குதிரைவண்டி போய் கோச்சு வண்டி வந்தது டம் டம்! அதுபோய் மோட்டார் வந்தது டம் டம்! மோட் டார் போய் இப்போது ஆகாய விமா னம் வந்திருக்கிறது டம் டம்!

ஃ

லோபிக்கு யாசகன் சத்துரு, திருடனுக்கு சந்திரன் சத்துரு, வியபிசாரிக்குப் புருஷன் சத்துரு, மூடர்களுக்குப் போதகன் சத்துரு, ஆசிரியர்களுக்கு இரவலில்தானே படித்துவிடுவோர் சத்துருவாம்!

ஃ

ஆவின்பாலில் சடையைத் திரித்து—பாம்புபோல் சடையை வளர்த்து—சுருணையாகத் தலையில் சுற்றி—மேனியெங்கும் சாம்பல் பூசி —காவி வஸ்திரம் தரித்துக்கொண்டு —காசு பிச்சை வாங்கி சேர்த்து— அந்தி நேரமானதும்—கள் குடிக்கும் சாமி சாமி வாழியே!

# மறுபடி பழய மண்சட்டி.



நவகுமாரனுக்கு இளமையிலேயே ஒருவித கோணல்புத்தி. பள்ளிக்கூடத்திலுங்கூட அவன் மனப்போக்கு ஒரு குறுகிய வழியிலிருந்தது. 'ஒட்டகம் மிகவும் உயரமானது' என்று உபாத்தியாயர் பாடம் கற்பிக்கும்போது, நவகுமாரன் இந்தப் படிப்பால் மானிட வாழ்வுக்கு என்ன பயன் என்று வினவுவான். அதற்குப் பதிலாக இரண்டு பிரம்படிகள் அவனுக்கு விழும். பவுன், ஷில்லிங் கணக்கு போடும்போது காலணுவுக்கே வழியில்லாத நாம் இந்தப் பவுன் கணக்கை ஏன் கற்றுக்கொள்ள என்பான். வீட்டிலும் ஒரு விலகிய தன்மையோடேயே அவன் இருந்தான். நவகுமாரனுக்குப் பெற்றோர்கள் இல்லை. தன் அத்தையிடம் வசித்துவந்தான். அத்தையின் கணவனுக்கு ஒரு கடையில் பத்து ரூபா குமாஸ்தா வேலை, வீட்டில் மண்சட்டிதான். காலையில் பழய சோறுதான். காபி பலகாரங்கட்குக் கதி கிடையாது. ஒரு தினம் ஒரு கிழவி மிக்க கேவலமான உடையுடன் எல்லாம் கிழிந்து அங்கமெல்லாம் தெரியப் பிச்சைக்கு வந்தாள். அதை நவகுமாரன் கண்டு மனம் தாளாமல் தன் அத்தையின் சேலையொன்றை ரகசியமாக எடுத்துக் கொடுத்துவிட்டான். இந்த சங்கதி அத்தைக்குத்தெரிந்து கனத்த கோபம்கொண்டு அடித்து, உன் அப்பன் வீட்டுச் சொத்தா?—அவ்வளவு நல்ல சேலையைத் தொலைத்துவிட்டாயே என்று கண்டபடி தூஷித்தாள். நவகுமாரன் மிக்க வருந்தியவனாய், "யாவும் பரம பிதாவாகிய அப்பன் வீட்டுச் சொத்துதான்" என்றான். அத்தைக்கு இன்னும் கோபம் அதிகமாயிற்று. மனுஷ்யர்கள் இருப்பதால் தானே அதிகாரம் செய்கிறாய்; எவரும் இல்லாவிடில் யாரிடத்தில் அதிகாரம் செய்கிறது?" என்றான். இதன் பொருள் அத்தைக்குத் தெரியவில்லை. எதுவும் தானே பட்டாலன்றித் தெரியாது.

ஃ

மறுதின முதற்கொண்டு நவகுமாரன் தென்படவில்லை. அவன் காணமற்போய் ஐந்து வருஷங்களாயின. இதனிடையில் நடந்த மாறுதல்கள் அநேகம். அத்தைக்கு ஒரு தங்கையுண்டு. அவள் விதவையாகி ஸகல சொத்துக்களுடன் தன் தமக்கையிடம் வந்து சேர்ந்தாள். அதனால் அத்தையின் புருஷனுடைய வாழ்வு உயர்ந்து பெரிய வியாபாரியாகி ஏராளமான வேலையாட்களுடன் மோட்டார் சவாரியில் விளங்கினார். அத்தையின் ஓட்டு வீடு இப்பொழுது மூன்றடுக்கான மெத்தை வீடாகப் பிரகாசித்தது. அத்தை இவ்விதம் தன் தங்கையின் சொத்துக்கள் மூலமாகக் கனத்த செல்வத்தில் புரண்டுகொண்டிருந்தாலும் தான் வளர்த்துவந்த நவகுமாரனை அவள் மறக்க முடியவில்லை. ஏதோ ஒரு சேலைக்காக அவனைத் திட்டித் துரத்தினேனே, மனுஷர்கள் இல்லாவிட்டால் யார்மேல் அதிகாரம் செய்வாய் என்று அவன்

---

உலகுக்கு ஒரு நற்போதனை—தங்களுடைய அனுபவத்தின் மூலியமாய் ஏற்படுமெனத் தோற்றினல் அதை வெளியிட வெட்கப்படக்கூடாது.

கேட்டதின் அருத்தம் இன்றல்லவா தெரிகிறது. இப்போது நவகுமாரனை அதிகாரம் செய்ய முடியுமா என்று கூறிக்கொண்டே கண்ணீர்விட்டாள். அத்தையின் தங்கைக்கு நிர்மலா என்ற ஒரு பெண் குழந்தையைத் தவிர வேறு ஆண்சந்ததி கிடையாது. அத்தைக்கோ அந்த ஒரு பெண் குழந்தைகூட இல்லை. மலடியாய் மகா பாக்கியவதியாய் இருந்தாள்.

ஃ

ஒருநாள் மத்தியானம் மூன்று பைராகிகள் பிச்சைக்கு வந்தனர். அத்தை அவர்களுக்கு அரிசிபோடச் சென்றவள் அம்மூவரில் ஒருவனைக் கண்டதும் திடுக்கிட்டு அவன் கையை உறுதியாகப் பற்றிக்கொண்டு ஆ! நவகுமாரா! இந்தக் கோலத்திலா உன்னைக் கண்டேன் என்று அலறினாள். நவகுமாரனும் கண்ணீர் நிறைந்தான். நவகுமாரனுடைய குருவான பெரிய பைராகி, இனி அவன் குடும்பத்தோடிருந்து வாழ வேண்டுமேயன்றித் தன்னுடன் வரக்கூடாதென்றும், தன்னை எப்போதாவது காண வேண்டுமென்று ஆவலுதித்தால் காசியிலுள்ள மடத்திற்கு வந்தால் தன் இருப்பிடம் தெரியுமென்றும் கூறி நவகுமாரனைத் தைரியப்படுத்தி அத்தையின்வசம் ஒப்புவித்துச் சென்றார்.

ஃ

அத்தை தன் ஐசுவரிய ராசிகளையெல்லாம் நவகுமாரனுக்குக் காண்பித்தாள். ஞானகலா விலாஸனான நவகுமாரன் இந்த செல்வத் திமிரை ஒரு பொருட்டாய் மதிக்கவில்லை. அத்தை தங்கக் கிண்ணியில் பால் சாதம் பரிமாறினாள். நவகுமாரன் புன்னகையோடும் நமது பழைய மண்சட்டி எங்கே அத்தை என்று கேட்டான். அத்தை சிரித்துக்கொண்டாள். நவகுமாரன் பொன் சட்டியில் சாதம் புசித்து எழுந்தான். சில மாதங்கள் சென்றன. நவகுமாரனுக்கும் நிர்மலாவுக்கும் காதல் பெருகியது. இருவரும் ஒருவரை யொருவர் விரும்பி நின்றனர். ஆயினும், அத்தையின் தங்கைக்கு ஒரு காசுக்கும் கதியற்ற—ஒரு உத்தியோகத்தில்கூட இல்லாத நவகுமாரனுக்குக் கொடுக்க மனமில்லை. எம். ஏ. வகுப்பில் வாசித்துக்கொண்டிருக்கும் தன் உறவினனான பிரபாகரனுக்குத் தரத் தீர்மானம் செய்துவிட்டாள். நிர்மலாவுக்கு இது சம்மதமில்லையானாலும் மதிக்கப்படாத பெண் கட்டையின் விருப்பத்தை யார் கவனிக்கிறார்கள்?

ஃ

நவகுமாரன் மனம் வாடியவனாய் இந்த ஐசுவரியம் சதமா; நிர்மலா எனக்கேதான் சொந்தம்; வேறிடத்தில் தருவதானால் அவள் தற்கொலை செய்துகொள்வது நிச்சயம் என்று கூறிவிட்டு எவருக்கும் சொல்லாமல் எங்கோ சென்றுவிட்டான். நான்கு வருஷங்களாகியும் அவன் திரும்பவில்லை. நவகுமாரன் சென்ற சில தினங்களுக்குப் பிறகு எம். ஏ. பிரபாகரன் லண்டனுக்குச்சென்று ஐ. ஸி. எஸ். பரீக்ஷைக்கு வாசித்து வந்தபின் விவாகம் செய்துகொள்வதாய்ச் சொல்லிப் புறப்பட்டுப்போனான். இதன் பின் அத்தையின் புருஷனுக்குக் கூட்டு வியாபாரத்தில் கனத்த நஷ்டமுண்டாகி, அதில் வியாஜ்யங்களும்

---

தந்தை தனக்கு வைத்துச்சென்ற ஏராளமான சொத்துகள் அடுத்த தலைமுறைக்கும்கூட வரக்கூடியதாயிருக்க, தங்களது மோசபுத்தியால் ஊராரை வஞ்சிக்கப்போக, அந்த பாபத்தால் உள்ள சொத்துக்களும் கரைந்து நடுத்தெருவிலாகிவிட்டவர்கள் எத்தனையோ பேர்.

சேர்ந்து முடிவில் எதிர்பக்கம் தீர்ப் பாகி ஸர்வசொத்துக்களும் போய் ஒரு ஓட்டு வீட்டில் வாழும்படியாகச் சம் பவித்தது. பிரபகாரன் ஐ. ஸி. எஸ். பரீக்ஷையில் தேறித் திரும்பிவந்ததும் தரித்திரக் கழுதையான நிர்மலா தேவையில்லை யென்று சொல்லிவிட் டான். யாவரும் ஒரு கிராமத்தில் குடி யேறினர். பழய மண்சட்டி மறுபடி யும் ஆரம்பமாயிற்று. நிர்மலாவை எவ ரும் விவாகத்திற்கு வந்து கேட்க வில்லை.

ஒருநாள் அத்தையின் வீட்டுக்கு ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் வந்து வீட்டைச்சோதிக்கவேண்டுமென்றார். அத்தை நடுங்கி திருட்டுச்சொத்து இங்கு ஒன்றுமில்லை என்றாள். "என் சொத்து இந்த வீட்டில் இருக்கிறது" என்றார் இன்ஸ்பெக்டர். உள்ளே நுழைந்து நிர்மலாவின் கரங்களைப் பற்றினார். நிர்மலா கண்ணீர் பெருக இன்ஸ்பெக்டரை வணங்கினாள். ஓ! நவகுமாரனா! என் கண்ணே! அத் தையை மறவாமல் வந்தாயா என் றான். நவகுமாரன், "மறுபடியும் பழய மண்சட்டி"யா? எனக்கு மண் சட்டிமேல்தான் பிரியம்; அதுதான் என்றைக்கும் சாஸ்வதமானது; மண் சட்டி வந்ததால் தான் என் நிர்மலா மறுபடியும் எனக்கே கிடைத்தாள். என் ஓயா முயற்சியால் படிப்படியாய் உயர்ந்து இப்போது நான் போலீஸ் இன்ஸ்பெக்டராக இருக்கிறேன்; நிர் மலாவுக்கு இரண்டாயிரம் ரூபாய் நகைகள் போடுகிறேன். பொன் சட்டி வீட்டுக்கு வருமாறும் செய்கி றேன்; எனக்கு நிர்மலாவைத் தருகி றீர்களா? என்றான். எவரும் தடை சொல்லவில்லை. விவாகமும் நடந்தது. இப்போது நவகுமாரன் பொன் சட்டி வாழ்வில் கல்கத்தாவிலுள்ள பாரிஸால் என்ற இடத்தில் போலீஸ் ஸுப்பிரண்டெண்டாகி நிர்மலாவுடன் தன் இரு அத்தைகளோடும் அத்தை யின் புருஷனோடும் சுகமாக வாழ்ந்து வருகிறான். அவனுடைய பழய குரு வும் அவனிடமே இருந்து வருகிறார்.

---

காலஞ்சென்ற ஸ்ரீமதி வீரம்மாள்:—மணிமங்கலம் க்ஷேத்திர வாஸியான இந்த அம்மையார் தெய்வபக்தி மிகுந்தவர். பெரியோர் களிடம் உபதேசம் பெற்றவர். ஸதா பகவத் ஸந்நிதியிலேயே வாஸமா யிருந்தவர். தாம் மரணமடையும் தினத்தை முன்னதாகவே தமது மக்களுக்குத் தெரிவித்தார். தமது பர்த்தாவை வைத்த இடத்தி லேயே தம்மையும் சேர்ப்பிக்குமாறு கூறி 28-7-32-ல் 55-வது வயதில் இறைவன் திருவடிநீழலெய்தினர். இந்த அம்மையாரின் மரணத்திற்காக மிக்க பிரிவாற்றாமையுடன் நமது அநுதாபத்தை அவரது குடும்பத்தினருக்குத் தெரிவித்துக்கொள்கின்றோம்.

நீ ஒரு நூலைப்படிக்கும்போது உனது சொந்த அனுபவங்கள் அதிலிருப் பின் அப்போதுதான் ஆநந்திக்கவும் விசனிக்கவும் முடியுமே தவிர, மற்றபடி நீ பட்டிராத விஷயங்கள் உன் மனதில் தைக்காது. ஆழமாகவும் விளங்காது. நீ ஒரு சாமர்த்தியமான மோசம் செய்திருந்து அந்த சங்கதியைப்போன்ற தொரு குறிப்பு ஒரு கதையில் வருமானால் அதை வெகு கருத்தாகப் படிப்பா யல்லவா?




## சொந்த வீட்டின் சுகம்.

'சொந்த மனை' எனும்பொழுதே சொல்லரிய
மகிழ் வெய்தும்; துயருற்றாலும்
தந்தமது வீட்டினிலே தம(து) உரிமை
பிறரகங்கள் தம்மில் இல்லை;
எந்த இடம் சென்றாலும் என்று நம(து)அகம்
மீள்வோம் என்னும் எண்ணம்
சிந்தையை விட்டகலாது; சீர் சொந்த
வீட்டு சுகம் செப்பப்போமோ! (1)

குடியிருத்தல் பிறர் மனையேல், குடக்கூலி
திங்கள்தோறும் கொடுக்க வேண்டிப்
படுவனவாம் பாடுகளைப் பகர்ந்திடவும்
முடிந்திடுமோ? பகரவ் வீட்டில்
குடியிருக்கும் பிறர்க்கு நல்ல குணமிலையேல்,
வினை சண்டை கூறப்போமோ?
அடிமை நிகர் வாழ்வன்றோ அயல்வீட்டில்
குடியிருத்தல்! அமைதி உண்டோ? (2)

நிழல் தருநன் மரக்கிளையில் நேர்கூட்டைச்
சிறுபறவை நித்தம் பேணும்;
உழலுகின்ற எலியும் அது உறையும் வளைக்(கு)
இணையிலையென்(று) உன்னி வாழும்;
விழல் வேய்ந்த மட்சுவரின் வீடெனினும்
சொந்தமெனில் வினை மதிப்பு,
அழகிய நன் மாடிமனை யாயிடினும்
பிறர் மனையேல், அமைவதுண்டோ? (3)

ஓலை புனை குடிலெனினும் உயர்மாடி
வீடெனிலும் உளத்திற்(கு) என்றும்
சால மகிழ்வூட்டுவது தனக்(கு) உரிய
வீடன்றோ! சாற்றதற்கு
ஞாலமதில் இணையுண்டோ? நம் வீட்டில்
நாம் அரசர்! நமது வீட்டிற்
போல பிறர் மனைகளிலே பொழுது
கழித்திடலாமோ? புகலுவீரே! (4)

நல்லன்பர் மனையெனினும், நாமங்கே
ஒதுங்கிநின்று நாணிக் கோணிப்
பல்வகைய சங்கடங்கள் பட்டிடவே
நேர்ந்திடுமாம்; பழக்கம் மிக்க
இல்லமதே என்றாலும் எவ்வறையும்
தடையின்றி ஏக லாமோ?
எல்லோரும் அன்பனைப்போல் இயம்பங்கு
நமை மதிக்க இசைவர் கொல்லோ? (5)

சொந்தமுறு வீட்டினிலே சொன் மழலைச்
சிறுவர் தனைச் சூழ்ந்திருக்க
'மொந்தை'யிலே கூழூற்றி மொழியுமவ
ரொடுகுடிப்பின் மூளும் இன்பம்,
பந்தியிலே பிறர் மனையில் பணக்காரர்
தம்மிடையில் பாயசத்தைச்
சிந்தை மிக நாணி மிகச் சீக்கிரத்தில்
அருந்துவதில் சேருங் கொல்லோ? (6)

வேலைபல செய்து மிக விசனமது
பெற்றுசொந்த வீட்டை நோக்கி
மாலையிலே ஆர்வமொடும் வரும்போது—
மக்களொடு மனைவி தானும்
கோலநகை முகத்தினராய் கூறும் மனை
வாயில் நின்று குளிர்ந்து நோக்கின்,
ஞாலமதிற் சொந்த மனை நல்லின்ப
நிலையமதாய் நவில லாமே! (7)

அன்பு நெறி வழுவாத ஆடவனும்
பொறை மிகுந்த அணங்குதானும்
இன்பம் மிகு நற்குணங்கொள் எழிலுடைய
குழந்தைகளும் இசைந்து வாழும்
துன்பமுறு பிணக் கேதுவும் சூழாத
மனையொன்று துலங்குமாயின்,
துன்பமெலாம் இன்பமெனத் தோன்றும்; அதைச்
சுவர்க்கமெனச் சொல்லலாமே! (8)

நாம் பிறந்து வளர்ந்த மனை; நமது தந்தை
இருந்த மனை; நாடு தோழர்
தாம் புகுந்து மொழியாடிச் சஞ்சலங்கள்
தவிர்த்த மனை; தையலோடு

பூம்பொழிலிற் போல தினம் புகலரிய
இன்பமதும் புதல்வர் தம்மால்
ஆம்பயனும் நுகர்ந்த மனை; அறையு(ம்)
இதற்(கு) ஒப்புண்டோ? அவனி மீதே! (9)

நமது சொந்த மனைஎன்றும் நமக்(கு)
உரியதாய் அமைக; நல்ல மக்கள்
தமக்குரிய நல்லின்பம் தரு நிலையமாய்
இலங்க; தளர்ந்த போது
அமைதி தரும் இடம்ஆக; அந்தியமும்
இம்மனையில் ஆக; என்றும்
எம(து) இறைவன் இவ்வில்லம் என்றென்றும்
சிறக்க அருள் இயற்ற மாதோ! (10)

ஆரியூர்—வ. பத்மநாப பிள்ளை.

## நமது நண்பனின் மனைவி.

நமது நண்பனின் மனைவியைக் குறித்து எந்த சம்பாஷணையும் வந்துவிடாமலிருக்க நாம் மிகவும் ஜாக்கிரதைப் படுகிறோம். ஏன் தெரியுமா? அந்த உத்தமியாள்—உயர் குணத்தாள் இன்று இவ்வுலகிலில்லை. ஆதலின் அந்த நாரீரத்தினத்தின் ஞாபகம் நமது நண்பனின் மனத்தில் உண்டாகிவிடலாகாதென்றும், அதனால் அவன் கண்ணீர் பெருக்கவொண்ணாதென்றும் முன்னெச்சரிக்கையோடும் இருக்கிறோம். இரண்டொரு சமயங்களில் "அவள் பேச்சை எடுத்து என்னை ஏன் ஞாபகப்படுத்திவிட்டாய்?—என் நெஞ்சு நோகிறதே!" என்று நம் நண்பன் அலறியிருப்பதையும் நாம் மறக்கமுடிகிறதில்லை யானதால், அந்தப் பிரஸ்தாபமே வராதவாறு வேறு வகையில் நாம் ஸம்பாஷணையை நடத்துகிறோம். ஆயினுமென்ன? எப்படியோ தப்பி அந்த உத்தமியின் பேச்சு இடையே வந்துவிடுகிறது. அந்த சமயம் நமது நண்பன்—"என் மனைவி உயிருடன் இருந்து உன்னை உபசரிக்க நீ கொடுத்து வைக்காமற் போனாய்" என்று கூறுகிறான். அச்சொல் நம்மனத்தில் சுருக்கென்று தைத்து, அப்பெண்மணியால் நாம் உபசரிக்கப்பட்ட பழைய நாட்களை ஆத்திரத்தோடு எண்ணவைத்து நம்மை மிக்க வேதனைப்படுத்திவிடுகிறது. கண்ணீருடன் கலங்குகிறோம்.




## 3. இல்லறம்.

(215-ம்பக்கத் தொடர்ச்சி.)

**277. "ஆனை இருந்து அரசாண்ட இடத்தில் பூனை இருந்து புலம்பி அழுகிறது".**

மிக்க பிரதாபத்துடன் பெரியோர் வசித்த வீதியில் பிறகு பெயர் சொல்வதற்குக்கூட மனிதர்கள் இல்லாமற் போகிறார்கள். அவ்விதமே எத்தனையோ கௌரவத்துடன் வாழ்ந்த குடும்பங்களில், அந்தப் பூர்வ கௌரவங்கட்குச் சற்றும் பாத்திரமில்லாதவர்களே நிறைந்திருந்துவிடுகிறார்கள். விவாகம் போன்ற விசேஷங்களில் அந்தப் பெரியோர்கள் வந்து உட்கார்ந்துவிட்டார்களானால் நூறு மனிதர்கள் வந்து கூடியதுபோலாகி எவ்வளவோ பெருமையைக் கொடுத்துவந்த காலம் போய், எந்தப் பிரசித்தியுமில்லாத சாமான்யர்களே கூடிநிற்கும் இடமாக ஆகிவிடுவதுமுண்டு. மானிட வாழ்வு இவ்விதமாக நிச்சயமில்லாத தன்மையில் உயர்வதும் தாழ்வதும் மறைவதுமான நிலைகொண்டு நிற்கிறது. இவற்றை ஒரு படிப்பினையாக நினைத்துப்பார்த்து தம் வாழ்க்கையை ஒரு ஒழுங்குடனும் கட்டுப்பாடான சிக்கனத்துடனும் ஒரு எல்லைக்குள்ளடக்கி நடத்திக்கொண்டு போகவேண்டியது முக்கியமென்பதை இப்பழமொழி இடித்துக்காட்டி எடுத்துச்சொல்லுகின்றது.

**278. "இங்கிதம் தெரியாதவளுக்கு சங்கீதம் தெரிந்து பலனென்ன?"**

பெண்களுக்கு முதலில் இருக்கவேண்டியது இனிமையாயும் அன்பாயும் அடக்கமாகவும் நடந்துகொள்ளவேண்டிய நற்குணமாம். அது இல்லாமல் மற்ற வெளிஆரவாரங்கள் இருந்து பலனென்ன என்பது இதன் கருத்து. புருஷனை எதிர்த்துக்கொண்டு அவனைப் பிடுங்கித்தின்னும் ராக்ஷஸியாக ஒரு பெண் இருந்துகொண்டு நோன்பு விரதாதிகளை வெகு சுத்தியும் பக்தியுமாய் நடத்துவாளாயின் அதில் என்ன பிரயோஜனம்? நோன்பு விரதாதிகளைவிட, தன்னை மணந்த கணவனுக்கு அன்பும் இதமுமாக நடந்துகொள்வதே பெரியதோர் தவத்திற்குச் சமமாகும். அந்த முக்கியத்தை விட்டுவிட்டு வெளிவேஷப் படிப்பில் ஆடம்பரம் செய்வது பயனற்றதென்றபடி. அது இல்வாழ்க்குரிய செய்கையுமாகாது.

**279. "இடாள், தோடாள், மனுஷாள்மேலே மேத்த பிராணன்".**

இது ஒரு பசப்பு வித்தை. பாசாங்கு நாட்டியம். அழுகிப்போன அல்ப குணம். எவருக்கும் இட்டு உபசரிக்கவும் மனம் வராது; ஒருவருக்கு

ஒரு நோய் வந்து பாயிற் படுத்தால் அவரைத் தொட்டு வேண்டிய சகாயம் செய்து கவனித்துப் பார்க்கிற சிரத்தையும் கிடையாது. ஆனால், வெளிப் பேச்சில்மட்டும் மனுஷ்யாள்மீது மிக்க பிராணனுக இருப்பதுபோல் காட்டிச் சொல்வது. ஒரு பிடி சாதத்துக்குக்கூட, அதை இட்டால் ஆகிவிடுமே யென்று கணக்கு பார்க்கிற இன்னேருடைய குடித்தன வாழ்வை நோக்கின் அங்கு எந்தச் செழிப்பையும் காணக்கூடவில்லை. உலகத்தில் ஒரு பெரிய ரகசிய சங்கதி என்னவெனில், தாராளமாய்ப் பிறருக்கு இட்டுத் தாமும் புசித்து நல்வாழ்வில் இருக்கிறவர்களுக்குக் கடவுள் இன்னும் மேன்மேலும் கிடைக்கும்படி செய்து, எல்லாம் இருந்தும் தரித்திரக் குடித்தனமாய் வாழு கிற கர்மிகளுக்கு உள்ளதையுங்கூட இல்லாதபடி செய்து பறித்துவிடுகிருர். இத்தகைய கருமித்தனம் இல்வாழ்வுக்கு யோக்கியமானதல்ல வென்பது கருத்து.

280. "இடித்தவள் புடைத்தவள் இங்கேயிருக்க, எட்டிப் பார்த்த வள் கோட்டிக்கொண்டு போனாளாம்."

எவர்கள் தங்கட்கு அதிகமாக உழைத்திருக்கிறார்களோ அவர்களுக்கு சுண்ணாம்பு தடவி நடுத்தெருவில் அலையவிட்டுவிடுகிறது. புதிதாக வந்து புது உறவு பிடித்து வெகு அன்புபோல் நடிக்கிறவர்களுக்கு அவர்கள் விரும் பியவற்றையெல்லாம் தூக்கித்தூக்கிக் கொடுத்து உபசரித்து அனுப்புகிறது. இது சில கம்பீரஜன்னிகளின் போக்கு. தங்களின் குழந்தைகள் நகைகள் ஏதுமற்றுப் பிறந்தமேனியாய்க் கிடக்க, ஊரார் வீட்டு வைபவங்கட்குக் கனத்த மரியாதை செய்துவிட்டுத் திரும்புகிறது. அதில் ஒரு பெருமை மூளைத்துக் கொண்டதாகப் பூரித்துக்கொள்கிறது. இது ஒரு குடித்தனத்துக்குத் தகாத செய்கையாகும்.

281. "இட்டவர்கள், தொட்டவர்கள், கெட்டவர்கள், இப்போது வந்தவர்கள் நல்லவர்கள்".

விவாகத்திற்குப் பிறகு ஒரு மனிதன் மாறிவிடுகிற குணப்போக்கை இந்தப் பழமொழி விளக்குகிறது. பழயவர்களை மறந்து, புதிதாகப் பந்துக்க ளானேரையே விசேஷமாகக் கவனிக்க முற்பட்டுக்கொள்ளுகிற சிலரின் இழிதன்மையை இது குறிப்பிடுகிறது.

282. "இட்ட உறவு எட்டு நாளைக்கு, நக்கின உறவு நாலு நாளைக்கு".

ஏதோ நமது கடமையின்பொருட்டுப் பந்துஜனங்களை உபசரிக்கிற தென்பதை ஒரு அளவிற்குட்படுத்தி அதை ஒரு தர்மமாகச் செய்து அவ்வள வில் திருப்திபட்டுக்கொள்ளவேண்டுமே தவிர, அவர்களுக்குச் செய்தோமே இவர்களுக்குச் செய்தோமே, அவற்றையெல்லாம் இப்போது நினைத்துப் பார்க்கிருர்களா, செய்து பலனென்ன என்று இவ்விதமாகவெல்லாம் குறை பட்டுக்கொள்ளக்கூடாது. ஏனென்ருல், இட்ட உறவு எட்டுநாளைக்குமேல் இராது. மறுபடியும் இட்டால் பின்னும் சில நாளைக்கு உறவு இருக்கும். இடுவதை நிறுத்தினாலோ அப்போதே பகையும் பிரிவும் தோன்றிவிடும். இட்டஉறவு இப்படியானல், ஏதோ சொற்பத்தை நக்கிவிட்டு எழுந்த உறவின் லக்ஷணத்தைச் சொல்லவேண்டியதில்லை. அது நாலுநாளைக்குக்கூட இருப் பது சந்தேகமே. (தொடரும்.)

# " அமிர்த குணபோதினி "

## ஆங்கீரஸ வருஷத்திய ஆவணி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| சி-ம | 16 | 1 | செவ் | ○ 18-6, அவி-46-40, விஷ்ணுபதி, யஜுருபாகர்மம். |
| சி-அ | 17 | 2 | புதன் | பிர-18-9, சத-49-6, ஶ்ராவணபகுளம், கரிநாள். |
| சி | 18 | 3 | வியா | துவி-19-41, பூட்-52-57. |
| சி-அ | 19 | 4 | வெள் | திரி-22-39, உட்-58-7, கஜ்ஜலி திரிதியை. |
| பி | 20 | 5 | சனி | சது-26-55, ரே-60-0. |
| அ-சி | 21 | 6 | ஞா | பஞ்-32-14, ரே-4-32. |
| சி | 22 | 7 | திங் | ஷஷ்-38-8. அசு-11-42, ஹலஷஷ்டி. |
| சி | 23 | 8 | செவ் | ஸப்-44-8, பர-19-6, கன்னியாயனம்-21-47, கிருத்திகா வீதலா விரதம். [லாஷ்டமி, கரிநாள். |
| அ-சி | 24 | 9 | புதன் | அஷ்-49-44, கிரு-26-17, தசாபல விரதம், கோகு |
| உ-ம | 25 | 10 | வியா | நவ-54-20, ரோ-32-39, ஶ்ரீஜயந்தி. |
| சி | 26 | 11 | வெள் | தச-57-28, மிரு-37-45. |
| சி | 27 | 12 | சனி | ஏகா-58-59, ஆரு-41-21. |
| சி | 28 | 13 | ஞா | துவா-58-42, புந-43-17, வைஷ்ண வைகாதசி. |
| சி | 29 | 14 | திங் | திர-56-41, பூச-43-27, பிரதோஷம். |
| சி | 30 | 15 | செவ் | சசி-53-10, ஆயி-42-6, சிவராத்திரி. |
| சி-அ | 31 | 16 | புதன் | ● 48-20, மக-39-26. |
| சி-ம | 1 | 17 | வியா | பிர-42-34, பூர-35-44, பாத்ரபத சுத்தம். |
| சி-அ | 2 | 18 | வெள் | துவி-36-7, உத்-31-19. |
| ம | 3 | 19 | சனி | திரி-29-20, ஹஸ்-26-30, ஸாமோபாகர்மம். |
| சி | 4 | 20 | ஞா | சது-22-23, சித்-21-31, திதிதுவயம், விநாயக சதுர்த்தி. [பாபஹர கௌரீவிரதம், ருஷிபஞ்சமி. |
| அ-ம | 5 | 21 | திங் | பஞ்-15-37, ஸ்வா-16-42, சூரிய-ஸம்பா-ஷஷ்டி, |
| ம-சி | 6 | 22 | செவ் | ஷஷ்-9-12, விசா-12-16, ஷஷ்டி விரதம். |
| அ-சி | 7 | 23 | புதன் | ஸப்-3-23, உப-54-43, அநு-8-26, புதாஷ்டமி. |
| பி-சி | 8 | 24 | வியா | நவ-54-10, கேட்-5-21, நந்தநவமி, ஆவணிமூலம். |
| அ-பி | 9 | 25 | வெள் | தச-51-0, மூல-3-9, க்ஷீர விரதம். |
| சி | 10 | 26 | சனி | ஏகா-48-49, பூரா-1-55, ஸர்வ-பரிவர்த்தன-ஏகாதசி |
| அ | 11 | 27 | ஞா | துவா-47-49, உரா-1-45, ஶ்ரவண துவாதசி. |
| அ-சி | 12 | 28 | திங் | திர-47-51, ஶ்ரவ-2-41, பிரதோஷம், கரிநாள். |
| சி-ம | 13 | 29 | செவ் | சசி-49-7, அவி-4-43, அனந்தவிரதம். |
| சி-அ | 14 | 30 | புதன் | ○ 51-26, சத-7-53, புரோஷ்டபத பூர்ணிமை. |
| சி | 15 | 31 | வியா | பிர-54-57, பூட்-12-9, கன்யாரவி 48-55, மஹாலயமாரம்பம். |

ஆகஸ்டு (5-28) — 16–31; செப்டம்பர் — 1–15

| | | | |
|---|---|---|---|
| | | | குஜ சுக் |
| ரா | 15உக்கு ராசி | | புத |
| சனி | | | ர-கு கேது |
| | | | |

" அமிர்த குணபோதினி " பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை—1932.